

# திருஞானசம்பந்தரில் இறைமையாக்கம்

இரா. செந்தாமரை

# திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம்

**இரா. வசந்தமாலை**
எம். ஏ., எம். பில்., பி. எட்.,
ஆய்வாளர் - தமிழியல்துறை,
புதுவைப் பல்கலைக் கழகம்,
புதுச்சேரி-605 014.

முகவரி :
**98, அக்கசாமி கோவில் வீதி,**
**வ. உ. சி. நகர்,**
**புதுச்சேரி-605 003.**

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | இரா. வசந்தமாலை |
| தலைப்பு | : | திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம் |
| பாடுபொருள் | : | சமயமும் இலக்கியமும் |
| முதற்பதிப்பு | : | திருவள்ளுவராண்டு 2028, 10, ஏப்பிரல் 98 |
| பக்கம் | : | 130 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| படிகள் | : | ஆயிரம் |
| அச்சகம் | : | கார்னேசன் அச்சகம், முத்தியாலுப்பேட்டை, புதுச்சேரி-605 003. |

திருமலை - திருப்பதி தேவஸ்தானம் வழங்கிய நிதியுதவியைக் கொண்டு இந்நூல் வெளியிடப்படுகின்றது.

| | | |
|---|---|---|
| விலை | : | உருபாய் 35-00 |

## படையல்

திருஞானசம்பந்தரின் அடிச்சுவட்டில்

தோடுடைய செவியன் சீர் பாடுவதில் மகிழும்

இறையன்பர்களுக்கும்

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பி நிற்கும்

இசையன்பர்களுக்கும்

# உள்ளடக்கம்


| | |
|---|---|
| ஆசியுரை | 01 |
| அணிந்துரை | 06 |
| என்னுரை | 11 |
| முன்னுரை | 17 |
| திருஞானசம்பந்தரின் வாழ்க்கைக்குறிப்பு | 26 |
| திருஞானசம்பந்தரின் அருட்செயல்களுக்குரிய அகப்புறச் சான்றுகள் | 52 |
| இலக்கியங்களில் திருஞானசம்பந்தர் | 84 |
| திருஞானசம்பந்தரின் விழாக்களும் திருமேனிகளும் | 104 |

# ஆசியுரை

## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம் என்ற அரிய ஆய்வினை இரா. வசந்தமாலை அவர்கள், புதுமையுறச் செய்துள்ளார்கள். நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தப் பெருமானின் பிறப்பின் நோக்கத்தைச் சேக்கிழார் வாக்கின் வாயிலாகத் தெளிவாக அறிய முடி கின்றது! உண்டு, உடுத்து, துய்ப்பன துய்த்து முடித்துக் கொள்கின்ற பிறப்பு அல்ல, இவ்வரிய ஞானமதலையின் தோற்றம்.

''வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூத பரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத''

நிலை காணப்படுகின்றது. இவ்வரிய மழலைச் செல்வத்தின் அழுகை வேத நெறியைத் தழைத்தோங்கச் செய்கின்றது. சைவத்துறையை விளக்கமுறச் செய்கின்றது. இந்த ஞான மதலையின் அழுகை, செந்தமிழ் வழக்கு அயல் வழக்கின் துறைவெல்ல இருப்பதை அறிவிக்கின்றது. திசையனைத்தின் பெருமை எல்லாம் தென்திசையே வென்று ஏறும் என்பதற் கான முன்னறிவிப்பு அது!

சேக்கிழார் தம் செந்தமிழ்க் காவியத்தில் பெரும் பகுதியை ஞானசம்பந்தப் பெருமானுக்கே ஒதுக்குகிறார்! ''பிள்ளை பாதி, புராணம் பாதி'' என்பார்கள். தமிழரின் அறநெறியை வாழ்வியல் நெறியைக் காரிருள் கவ்விய பொழுது கலைக் கதிரொளியாய்த் தோன்றிய ஞானக் கதிரவன் ஞானசம்பந்தப் பெருமான். தமிழர்களின் தொல் சமய நெறியை, பண்பாட்டு நெறியை நிலைநிறுத்திய காரணத்தால்தான் சேக்கிழாரின் செந்தமிழ்க் காப்பியத்தின் பெரும்பான்மைப் பக்கங்களில் காழியர்கோன் பெருமானே நின்று நிலவுகின்றார் என்ற அரிய செய்தியினை ஆய்வுரை யாளர் அருமையாகச் சுட்டி உள்ளார்.

ஞானசம்பந்தப் பெருமான் காலமும், பெருமான் பாடிய பைந்தமிழ்ப் பாடல்களின் திரல்முறை வைப்பும் மிகச் செம்மையாக ஆதாரத்துடன் வைக்கப்பட்டுள்ளன

ஆய்வாளரின் ஆய்வு முழுவதும் ஆய்வின் மையக் கருத்திலிருந்து விலகல் இன்றிச் செம்மையாக விளக்கப் பட்டுள்ளது ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித் திடுமின்'' என்ற பெறுதற்கரிய பிறப்பை வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வநிலைக்குத் தம்மை உயர்த் தல் என்பதே இறைமையாக்கக் கோட்பாடு! வையம் புகழ் வள்ளுவனின் சிந்தனைபோல் வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்து வானுறையும் தேவநிலைக்கு உயர்த்துதல் என்ற அரிய மையக் கருத்தை ஆழமாக அலசி நிருபித் திருக்கின்றார் ஆய்வாளர். ஞானசம்பந்தப் பெருமானின் வாழ்க்கையை வரலாற்றுத் திரிபுகளின்றி ஆராய்ந்து செம் மையாக விளக்கியுள்ளார்.

தேவர்களும் அடைவதற்கு அரிய மெய்ப்பொருளை ஈரலால் சுட்டிய ஞானமதலையின் அரிய வரலாறு தெளி வாக விளக்கப்பெற்றுள்ளது.

> ''ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
> கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
> அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே!''

என்ற அப்பரடிகளின் ஆவேசப் புரட்சியை, நடைமுறையில் ஞானசம்பந்தப் பெருமான் நிகழ்த்திக் காட்டுகின்றார், உரிமை மறுக்கப்பட்ட குடிப்பிறந்த திருநீலகண்ட யாழ்ப் பாணரை உடன் அழைத்துக்கொண்டு உலகெல்லாம் வலம் வருகின்றார்! இது மிகப் பெரிய புரட்சி!

அந்தணர் மரபில் தோன்றிய அருள்ஞானசம்பந்தப் பெருமானுக்குக் குல வழக்கப்படி முப்புரிநூல் அணியும் சடங்கு நடைபெறுகின்றது. அதுபோது,

> ''வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
> நாதன் நாமம் நமச்சிவாயவே''

என ஐந்தெழுத்தின் அரிய பெருமையை நிலைநாட்டு கின்றார்.

நாவுக்கரசரோடு நட்புப்பூண்டு தொண்டுநெறி வளர்த்த சிறப்பை ஆய்வாளர் நன்கு விளக்கியுள்ளார், முயலகன் நோய் தீர்த்தல், பனிநோய் தீர்த்தல், முத்துப் பந்தர் பெறுதல், உலவாக்கிழி பெறுதல் முதலிய அற்புதங்கள் சம்பந்தப் பெருமானிடம் நிறைந்திருக்கின்ற அமானுஷ்ய ஆற்றலை, திருவருட்பேற்றை உணர்த்துகின்றன ! மனிதக் குழந்தையாகத் திருவாய் மலர்ந்தழுத குழந்தை அன்னையின் ஞான அமுது உண்டபின் தெய்வக் குழந்தையாக மாறித் திருவாய் மலர்ந்தருளியது! திருமுறைகளை உணர்ந்து ஓதியதோடு அல்லாமல் அற்புதங்கள் நிகழ்த்திய அமானுஷ்ய ஆற்றலும் வளர்க்கப்படுகின்றது காதலனை இழந்து தவிக்கும் பெண்ணின் துயர் நீக்க விடம் தாக்கி இறந்த தலைவனை உயிர் பிழைக்கச் செய்கின்றார்: தீந்தமிழ் கேட்டு, திருமறைக் காட்டுக் கதவுகளைத் திறக்கச் செய்யும் அற்புதம் நிகழ்கின்றது. தென்பாண்டி மண்டலத்தில் தமிழ் நெறியை நிலைநிறுத்துகின்ற மிகப் பெரிய கட்டுப்பாடு ஞானசம்பந்தப் பெருமானுக்குத் தோள்மீது விழுகின்றது: நாளையும் கோளையும் கண்டு அஞ்சாத பழுதிலாப் புரட்சி வீரரின் வருகை, சமணர்க்குச் சிம்ம சொப்பனமாக உள்ளது ! சமணர்களை அனல்வாதிலும் புனல் வாதிலும் வென்று பாண்டியன் நெடுமாறனின் வெப்பு நோய் தீர்த்த தண்ணிலவாம். தமிழாளியர் திருஞான சம்பந்தப் பெருமான் ! அவர் புறநெறியை வென்று, அறநெறியை நிலைநிறுத்திய பாங்கை ஆய்வாளர் அருமையாக விளக்கியுள்ளார். பௌத்தரை வாதில் வெல்கின்றார். காய்க்காத ஆண் பனையைக், காய்க்கின்ற பெண் பனையாக மாற்றியது, எலும்பைப் பெண் உருவாக மாற்றிய அரிய நிகழ்வு சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. இந்நிகழ்வுகள் அனைத்தும் பிறர் துயர்கண்டு பொறாத, சமூக பிரக்ஞை உள்ளவராக ஞானசம்பந்தப் பெருமானை அறிவிக்கின்றன என்ற ஆய்வாளரின் ஆழ்ந்த சிந்தனை அருமையானது! இறைவனுக்கு இன்பத் தமிழ்ப் பாமாலைகள் சூட்டும் கவிவேந்தராக மட்டும் அல்லாமல் சமூகத்தின் துயரங்களை, துன்பங்களைத் தம் அருளாற்றலால் மாற்ற வல்ல அரிய

புரட்சி வீரராக, சமூகத் தொண்டராக ஞானசம்பந்தப் பெருமான் விளங்குகின்றார் என்ற ஆய்வாளரின் அறிவிப்பு மிகவும் பாராட்டுக்குரியது.

ஞானசம்பந்தரின் அரும்பெரும் அளப்பரிய செயல் களுக்கு, ஏராளமான புறச் சான்றுகளைக் காட்டி ஆய் வாளர் மிகக் கடுமையாக உழைத்து, வரலாற்றுத் திரிபு இன்றிப் பெருமானின் அருளிப்பாட்டினை விளக்கியுள்ளமை மிகவும் பாராட்டுக்குரியது!

அடியவர்கள் இறைமைப்படுத்தப்படுவதற்கு, அவர் களின் அருட்செயல்களே காரணம் என்ற ஆய்வாளரின் கண்ணோட்டம் புதுமையானது. ஏராளமான இலக் கியங்கள் ஞானசம்பந்தப் பெருமான் புகழ்பாடுகின்றன! அவற்றை மிகத் திறமையாகத் தொகுத்துத் தந்திருக்கிறார்.

சீகாழி திருமுலைப்பால் உற்சவம், திருக்கோலக் காவில் பொற்றாளம் பெற்ற நிகழ்ச்சி, திருமுறைமுற்றோ துதல் முதலியன ஆய்வாளரால் விரிவாகப் பேசப்படு கின்றன. ஞானசம்பந்தப் பெருமானின் திருமேனிகள் பற்றி யும் சிறப்பாகப் பேசப்பெற்றுள்ளது. திருஞானசம்பந்தப் பெருமானின் பல்வேறு பெயர்கள், பெருமானின் பெயரில் நிகழ்ந்த பல்வேறு அறச்செயல்கள், திருமடங்கள் பற்றிய கல் வெட்டுக்கள் பற்றியெல்லாம் அருமையாக விளக்குகின்றார்,

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானக் குயிலாக மட்டுமின்றி இன்னாத உலகத்தை இனியதாக ஆக்குகின்ற பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டார் தமிழ்த் திருஞானசம்பந்தர். நடமாடக் கோவில் நம்பர்க்கு ஈவதை, பரமர்க்கு ஈவதாகக்கொண்டு தொண்டாற்றினார். திருவீழிமிழலையில் பஞ்சம் நீக்கியது, முயலகன் நோய் போக்கியது திருமருகலில் விடம் தீர்த்தது, மதுரை மாநகரில் பாண்டியன் வெப்பு நோய் தீர்த்தது, பிறர் துயர் தீர்க்கும் தீர்க்கும் பணிகளே ஆகும்! உரிமை மறுக்கப்பட்ட குலத்தில் தோன்றிய திருநீலகண்ட யாழ்ப்பாணரை உடனழைத்துக்

கொண்டு உலகெலாம் சுற்றித் தமிழ் இசையுடன் உலா வந்து, நாளும் கோளும் கண்டு அஞ்சாப் பகுத்தறிவு நிலை முதலியவற்றால் சமுதாயத் தொண்டராகப் பெருமானை இரா. வசந்தமாலை பார்க்கின்ற பார்வைப் பரிமாணம் பாராட்டுக்குரியது.

புறநெறியை எதிர்த்துப் போராடி வென்று வாழ் வாங்கு வாழும் அறநெறியை நிலைநிறுத்தியும், மானுடக் குழந்தையாய்த் தோன்றி அன்னையின் அமுது உண்டு தெய்வக் குழந்தையாக மாறியும் ஞானசம்பந்தப் பெரு மான் அருளிப்பாடுகளை நிகழ்த்தி உள்ளார். துயர் ஏற்ற மானுடத்தின் துன்பம் துடைப்பதே தூய சமயநெறி என்ற புதிய வரலாறு படைத்த ஞானசம்பந்தப் பெருமானின் வாழ்வைப் புதிய கண்ணோட்டத்தில் ஆய்வாளர் படைத் துள்ளமை பாராட்டுகுரியது.

தெய்வம் மானுடமாய், உற்ற நோய் தீர்க்க உயிர்க்கு உறுகண் துடைக்க வருதல், புதுமை அன்று பெருமை யும் அன்று. மனிதன்தன்னை வருத்திக்கொள்வது தன் னலத்திற்கு அன்று! பிறர் துன்பம் துடைப்பதற்காக வாழும் நோன்புநிலை, மனிதத்தை தேவநிலைக்கு உயர்த்தும் என்ற கருத்தைப் புதிய நோக்கில் படைத்துள்ள ஆய்வின் மையக் கரு எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

திருக்கோயில்களில் திருஞானசம்பந்தப் பெருமானுக்குப் பல திருமேனிகள் உண்டு! சமய இலக்கிய உலகில் பெரு மானுக்குப் பல பரிமாணங்கள் உண்டு! புதிய பரிமாணத்தை மிக ஆழமாக, அருமையாக, தெளிவாக, சிறப்பாக விளக்கியுள்ள இவ்வாய்வு சமய இலக்கிய உலகிற்கு மற்றும் ஓர் அணிகலன் ஆகும். இதனை ஆக்கிய ஆய்வாளர்க்கும் வழிகாட்டிய நெறியாளர் சான்றோர் பெருந்தகைக்கும் நெஞ்சுநிறை வாழ்த்துக்கள்.

மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகமெல்லாம்!

பொன்னம்பல அடிகளார்

# அணிந்துரை

வழங்கியவர்
**முனைவர் நாகப்பா நாச்சியப்பன்**
தமிழ்ப் பேராசிரியர்
காஞ்சி மாமுனிவர் பட்ட மேற்படிப்பு ஆய்வு மையம்
புதுவை-8.

''பூழியர் கோன் வெப்பொழித்த புகலியர்கோன்
கழல் போற்றி''

சிவனெனும் நாமம் தமக்கேயுரிய செம்மேனி எம்மானான மூலப்பரம்பொருள் நாடு கடந்து, மொழி கடந்து, இனம் கடந்து அமைந்த ஒன்றாகும். இப்பரம்பொருளை வியாபித்த தன்மையை ஞானிகள் கண்டு உணர்ந்து தேர்ந்து தெளிந்து பாடிவைத்தார்கள்.

''தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

என்ற ஞானப் பனுவல் அடிகள் சிவத்தின் பரம்பொருள் தன்மையை எடுத்துக்காட்டும் மாணிக்க வார்த்தைகள் எங்கும் வியாபித்து எல்லாமுமாய் இருக்கின்ற பரம் பொருளை ஒவ்வொரு இனத்தாரும் மொழியாரும் தத்தமது மொழிகளிலேயே கண்டு உணர்த்த விரும்பினர். அப் பொழுதுதான் பரம்பொருள் அனுபவம் இலக்கியம் பெற்றது. இக்காலகட்டத்தில் மொழிகளில் தொன்மை மொழியாம் தமிழ்மொழி இறைமை நிலையை எண்ணற்ற சொற்களில் வடித்துக் காட்டியது. அவ்வாறு தோன்றிய வையே தமிழ்ப்பக்தி இலக்கியங்கள்.

பக்தி எனும் இறையன்பு தொன்றுதொட்டு நம் பண்டை இலக்கியங்களில் பேசப்பட்டு வந்துள்ளது. தொன்மைக் காலத்தில் அப்பக்தி என்பது முழுமையான, தூய்மையான அன்பாக மட்டுமே இருந்தது, அதற்குச் சமயம், மதம் எனும் நாமங்கள் இடப்படவில்லை. சமயம் என்ற கட்டுக்கோப்பான வாழ்க்கை நெறி தோன்றிய

காலத்தில் தமிழர்தம் தொன்மை வழிபாடான சிவனிய வழிபாடும், மாலிய வழிபாடும் முறையே சைவம், வைணவம் என்ற நாமங்கள் பெற்றன.

தமிழர்தம் வழிபாடான சைவம், வைணவம் இரண்டும் வட இந்தியச் சமயங்களின் வரவால் சிறிது காலம் தளர்ந்து நடை போட்டன. பின்வர் தமிழ்நாட்டில் தோன்றிய திருமூலர், காரைக்காலம்மையார், சமயக்குரவர்கள் நால்வர்களின் தமிழ்த்தொண்டினால் சமயம் மறுமலர்ச்சி பெற்றது என்பது சமய வரலாறு அறிந்த உண்மை.

சைவ சமயத்தின் மறுமலர்ச்சிக்குப் பலர் காரணமாயிருந்தாலும் கவுணியக் குழவியான ஆளுடைய பிள்ளையின் அருந்தொண்டு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். சமயத்தை வளர்ப்பதற்கு இலக்கியம் பாடுதல் என்பதோடு மட்டும் நின்றுவிடாமல் அதை ஒரு இயக்கமாக நடத்திய பெருமைக்குரியவர்கள் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஆவார்கள். இவர்களுள் திருஞானசம்பந்தர் பெருமான் சத்புத்திர மார்க்கம் எனும் நன்மகன்மை நெறியில் இறைவனைத் தோன்றாத் துணையாய்க்கொண்டு இயக்கம் நடத்தியவர். ஆகவே ஞானசம்பந்தனாரைச் சைவசமய உலகம் தலைவராக எண்ணிப் போற்றி வழிபட்டது. திராவிடசிசு என்று அழைக்கப்பட்ட ஞானசம்பந்தரும் தமிழகத்தில் முதன்முதலில் மக்கள் குடியுரிமை முழக்கம் நிகழ்த்திய நாவுக்கரசர் பெருமானும் இல்லையேல் தமிழகத்தில் பக்திப் பயிர் முளையிலேயே கிள்ளி எறியப்பட்டிருக்கும் அத்தகைய பீடும் பெருமையும் பெற்று சைவத்தின் இரு கண்களாய்த் திகழ்ந்தவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் எனும் இரு பெரும் பாவேந்தர்கள்.

நாட்டரசு கோடிய காலத்தில் பாட்டரசு செய்து பழந்தமிழ் மண்ணைக் காத்த பெருமையர் இருவரில் ஒருவரைப் பற்றிய ஆய்வாகச் செல்வி. இரா. வசந்தமாலையின் திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம் என்னும் இவ்வாய்வு நூல் அமைந்துள்ளது.

அவதாரம் என்பது வைணவ சமயத்தில் கூறப்படும் இறைமைக் கருத்து. இறைவன் மானுட உருக்கொண்டு மண்ணுக்கு இறங்கிவந்து மனித தருமத்தைக் காத்தல் என்பது அந்நெறி சைவசமயம் அவதாரம் எனும் கருத்தை அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை மானுடன் மண்ணில் நல்ல வண்ணம் வைகலும் வாழ்ந்து மனித தருமத்தைக் காத்து இறைமையாக்கப்படுகிறான் என்ற கருத்தே இங்கு மேலோங்கி இருக்கிறது.

''ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து'' (குறள் 353)

என்பது நம் வான்மாறை.

இந்நிலையில் ஞானசம்பந்தரின் இறைமையாக்கம் எனும் இவ்வாய்வு நூல் ஞானசம்பந்தர் பெருமான் வாழ்வியல் தொடங்கி இறைமைப் பேறு பெற்ற நிலைவரை எடுத்துக் காட்டுகிறது. ஞானசம்பந்தரின் அருட்செயல்களுக்குரிய அகப்புறச் சான்றுகள், இலக்கியங்கள், வழிபாடு விழாக்கள், கல்வெட்டுச் செய்திகள் என்று பல நிலைகளில் ஞானசம்பந் தரின் இறைமை நிலையாக்கத்தை ஆய்வு செய்துள்ளது.

ஞானசம்பந்தரின் வாழ்வியலில், திருத்தருமபுரம் யாழ் முரிநாதர் திருமுற்றத்தில் நடந்த செயற்கரிய செயல் சைவத்தின் அடிப்படைக் கருத்தான ஆணவத்தை அழித்தல் என்பதாகும். ஆணவ மலம் அழிக்கவொண்ணாதது. அதை ஞானசம்பந்தரின் வாழ்வியலில் வைத்து உலகுக்கு உணர்த்திய திறம் போற்றற்குரியது. தமிழில் சந்தப்பாடல் களை முதன்முதலில் வழக்கிற்குக் கொண்டுவந்து பெருமை செய்த திருத்தோணிபுரத்தார் 'முரிப்பாட்டு' என்ற பாட்டு வகையைத் தமிழுக்குத் தந்தார். பரிப்பாட்டு, வரிப்பாட்டு வகையில் 'முரிப்பாட்டு' எனும் பாடல்மூலம் தம் இசைத் திறமையைத் தமிழ்ப்பண்ணின் சிறப்பை உலகுக்குக் காட்டி யவர் ஞானசம்பந்தப் பெருமான். இவர் பாடியருளிய ''மாதர் மடப்பிடியும் மட அன்னமும் அன்னதோர்',

எனும் 'யாழ்முரிப் பதிகத்தை' நூலாசிரியர் தம் நூலில் திறம்பட எடுத்து விளக்கியுள்ளார். அனல் புனல் வாதங் களின் மூலம் சைவத்தை நிலைநிறுத்திக் காட்டிச் சமயப் பெரும்பணி செய்த பெருந்தகையாளர் ஞானசம்பந்தர் என்பதைத் தக்க சான்றாதாரங்களுடன் ஆய்வு நெறி முறை வழிநின்று காட்டியுள்ள திறம் பாராட்டுதற் குரியது.

இறைவனால் மகன்மை நெறியில் ஆட்கொள்ளப்பட்ட ஞானசம்பந்தர் இறைமை நிலையெய்துதற்கு இறைவன் அருளிய அருட்திறங்கள் பலவாகும், பதினாறு ஆண்டுகளில் பலதிறப்பட்ட அருட்செயல்கள் செய்து மானுடம் இறைமை பெற்ற நிலை இந்நூலுள் விரிவாகப் பேசப்படுகிறது. ஞான சம்பந்தர் பெருமானை முருகனின் அவதாரம் என்று கூறும் வழக்கு ஒன்று உள்ளது. இவ்வழக்கைப் பின்பற்றிப் பிற் காலச் சிற்றிலக்கியங்கள் ஞானசம்பந்தரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடல்கள் புனைந்துள்ளன. ஞான சம்பந்தர் பெருமான் திருக்களிற்றுப்படியார் தொடங்கி அருட்பா வரையில் எவ்வாறெல்லாம் இலக்கியங்களில் பேசப்பட்டுள்ளார் என்பது தக்க இலக்கியச் சான்றுகளுடன் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. வைணவத்தில் மதுரகவி யாழ்வார் நம்மாழ்வாரைக் குருவாகக் கொண்டதுபோல் வடலூரர் வள்ளல்பெருமான் இராமலிங்க சுவாமிகள் திரு ஞானசம்பந்தரைத் தம் குருவாகக் கொண்டு ஒழுகியமை காட்டப்பட்டுள்ளது.

இறைமை நிலை எய்திய ஞானசம்பந்தர் பற்றிய கல் வெட்டுச் செய்திகள் அவர்க்கு எடுக்கப்பட்ட வழிபாடுகள், விழாக்கள் ஆகியவைகள் கள ஆய்வு செய்து காட்டப் பட்டுள்ளன. பக்தி இலக்கியப் பாடுபொருளாய் அமைந்த ஒரு கூறை எடுத்துக்கொண்டு கள ஆய்வுமூலம் மக்கள் வழக்கின் வன்மை மென்மைகளை ஆய்ந்து கூறும் இந்நூல் தமிழுக்குக் கிடைத்த ஒரு நல்வரவு.

பல்கலைக் கழகங்களிலும் ஆய்வு மையங்களிலும் ஆய்வுப்பட்டப் பேற்றிற்காக மட்டும் சில ஆய்வுத் தலைப்புகள் எடுத்துக்கொள்ளப்பட்டு ஆய்வுகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் செல்வி இரா. வசந்தமாலையின் இந்நூல் பக்தி இலக்கியத்தின் ஒரு கூறை முழுமையான ஈடுபாட்டுடன் எடுத்துக்காட்டும் முறையில் அமைந்துள்ளது. பக்தி இலக்கியம் என்றாலே ஏதோ பழம் பஞ்சாங்கத்தைப் பேசுகின்ற வீண் வெற்று மொழி என்று எண்ணும் அரை வேக்காட்டுக் காலகட்டத்தில் பக்தி இலக்கியம் என்பது பொருள் பொதிந்த 'நுண் நெற்று மொழி' என்பதைக் காட்டும் முறையில் ஞானசம்பந்தரின் இறைமையாக்கத்திற்கு நூல் வடிவம் தந்துள்ள நூலாசிரியரைத் தமிழ் உலகமும், சைவ உலகமும் என்றும் மறவாது. இவர் தமிழ்ப்பணி சிறக்க இறையருளை வேண்டுகிறேன்.

''வையை மணலினும் வாழ்க பல்லாண்டு''

# என்னுரை

''சொற்கோவும் தோணிபுரத்தோன்றலும் என் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்-முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே? மாமறைநூல் தான் எங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே?''

(பெருந்தொகை 1873)

எனும் பாடல் நால்வர் தெய்வத்தமிழின் சிறப்புணர்த்தி நிற்கின்றது. இந்நால்வருள் திருஞானசம்பந்தரின் பாக்களே எண்ணிக்கையில் முதன்மை வாய்ந்தவை. இவர்தம் சிவ எண்ணம், சிவ உணர்வு போன்றவை பிள்ளைப்பருவம்முதல் வெளிப்படுமாற்றை பெரிய புராணத்தால் அறிவியலும் முதல் மூன்று திருமுறைகளும் இதற்கு முதன்மை ஆதாரங்களாக விளங்கிடினும் இலக்கியங்களும், கல்வெட்டுகளும், திருவிழாக்களும் துணைநிலை ஆதாரங்களாய் நின்று திருஞானசம்பந்தரை இறைநிலைக்கு உயர்த்தி நிற்கின்றன.

பக்தி இலக்கியங்கள் மீது கொண்ட ஈடுபாட்டின் காரணமாகத் திருஞானசம்பந்தரின் பாக்களைப் படிக்க நேர்ந்தது. மனிதநிலையில் உள்ள ஒருவர் சமூகத் தொண்டின் காரணமாகக் குருநிலையை அடைகின்றார்; பின்னர் வழிபாட்டின் காரணமாக இறைத்தன்மையைப் பெறுகின்றார்; ஒரு சில காரணங்களின் வழி முருகப் பெருமானின் அவதாரமே என்றும் சிறப்புப் பெறுகின்றார்; இந்நிலையில் ஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றின் வழிநின்றும் (இலக்கியங்கள்) சமூகத்தில் இவரைப்போற்றும் பாங்கினின்றும் (திருவிழாக்கள்) இவர்தம் இறைமை யாக்கத்தினை வெளிப்படுத்தும் ஆவலினால் பிறந்ததே 'திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம்' எனும் இந்நூல்.

இந்நூலின்கண் 'திருஞானசம்பந்தரின் இறைமை யாக்கம்' ஆறு நிலைகளின்கீழ் விளக்கப்பட்டுள்ளது.

(1) சிவம்பெருக்கும் பிள்ளையாரான திருஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றைச் சுந்தரர், நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழார் போன்றோரின் குறிப்புகளின் வழிநின்று தொகுத்தும் பகுத்தும் வரலாற்று முறையில் எடுத்தியம்பமுயல்வதே முதல்நிலை.

(2) திருஞானசம்பந்தரின் இறைமைக்கு அடிப்படைக் காரணமான அருட்செயல்களைத் தேவாரம் கொண்டும், புறச்சான்றுகளைத் திருத்தொண்டத்தொகை, பதினோராம் திருமுறை, பெரியபுராணம் முதலானவற்றின் வாயிலாகவும் விரித்துரைக்க முயல்வது இரண்டாம் நிலை.

(3) சேக்கிழாருக்குப் பின்தோன்றிய பிள்ளைத்தமிழ், பரணி, குறவஞ்சி, உலா போன்ற சிற்றிலக்கியங்களிலும், திருக்களிற்றுப்படியார், நால்வர் நான்மணி மாலை, திருத்தொண்டர்மாலை, திருப்புகழ், திருவருட்பா, குமரகுருபரின் பிரபந்தத்திரட்டு முதலான இலக்கியங்களின் வாயிலாகவும் அறியவியலும் இறைமாண்பினை விளக்க முயல்வது மூன்றாம் நிலை.

(4) திருஞானசம்பத்தர் இறைநிலைப்படுத்தப்பட்டதன் விளைவாக நடைபெற்றுவரும் சீர்காழி 'திருமுலைப்பால் உற்சவம்', திருக்கோலக்கா 'பொற்றாளம் பெறும் நிகழ்ச்சி, ஆச்சாள்புரம் நல்லூர்ப்பெருமணம், முதலான ஊாகளின் நிகழ்ச்சிகள், சைவ அடியார்கள் போற்றி நடத்திவரும் திருமுறை முற்றோதல் நிகழ்வு போன்றவை குறித்தும் பெருமானின் தோற்ற நிலைகள் குறித்தும் விளக்குவது நான்காம் நிலை.

(5) இலக்கியங்களுக்கு அடுத்த நிலையில் சம்பந்தரின் பேறு குறித்து ஆய்வதற்குக் கல்வெட்டுகளே பெருந்துணைபுரிதலான் இதன்வழி அறியலாகும் சம்பந்தரின் பல்வேறு பெயர்கள், திருமேனிகள், மடங்கள், இறையிலி நிலங்கள், திருநந்தவனம், திருமுறைப்பாக்கள் குறித்த செய்திகள் போன்றவற்றை எடுத்தியம்ப முற்படுதல் ஐந்தாம் நிலை.

(6) ஞானசம்பந்தர் இறைநிலைப்படுத்தப்படுவதற்கு முதற்காரணமான 'முருகன் அவதாரம்' என்ற கருத்தை முன் வைப்பதற்கான சூழல்களும், இலக்கியங்களில் இதற்கான சான்றுகளும் ஆராயப்பட்டு அடியார் வழிபாடு, குருவழிபாடு போன்றவற்றில் இறை ஞானசம்பந்தரின் பங்கு என்ன என்பது குறித்து விளக்குவது நிறைவு நிலை.

'திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம்' பற்றி ஆய்வுக் கண்ணோட்டத்துடன் திரட்டிய தரவுகளின் சிறப்புக்கருதி அவற்றைச் சைவ உலகத்தாரோடு பகிர்ந்து கொள்ள விழைந்ததன் விளைவே இச்சிறுநூல். இதன் வழி நின்று சைவ அடியார்களின் இறைமைப்பண்புகள் குறித்த ஆய்வுகள் தொடரப்பெறுமானால் இதுவே இச் சிறு முயற்சியின் பலனுமாகும்; சைவ ஆய்வுலகின் வளர்ச்சியுமாகும்.

'திருமுறைகளே நமது மறை; திருக்குறளே நமது பொதுமறை' என்று தெய்வத்தமிழைப் பறைசாற்றி வருகின்ற திருவண்ணாமலை ஆதீனகர்த்தர் தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் மனமுவந்து ஆசியுரை நல்கி இந்நூலிற்கு மணங்கூட்டினர் அவர்தம் அருளுள்ளத்திற்குப் பணிவான நன்றிகள்.

அடியேனின் எளிய பணியை வாழ்த்தி, அணிந்துரை நல்கியவர், திருமுறைகளில் ஈடுபாடும் சைவ நெறிகளைப் போற்றிவருவதில் மகிழ்வும் கொண்ட பேராசிரியர் முனைவர். **நாகப்பாநாச்சியப்பன்**. அவர்களுக்கு நன்றிகள் பற்பல.

கல்விபயில் காலத்தே எழுத்துப்பணியிலும் கலைப் பணியிலும் என்னை உருவாக்கி எனது இவ்விரண்டாவது நூலும் தமிழ் இலக்கிய உலகில் அடியெடுத்து வைப்பதற்குக் காரணமான என் குருநாதரும் தலைமையனுமாகிய **அ. அறிவுநம்பி** அவர்களுக்கும் உலம் நிறை நன்றிகள்.

ஆய்வுத்தரவுகளைத் திரட்டவும், எழுதவும் **உதவிகள்** செய்த தமிழியல் துறையினருக்கும் ஆய்வுக்கருத்துகளை நெறிப்படுத்தி ஏடாக அமைக்கப் பேருதவிபுரிந்த பேராசிரியர். **அ. பாண்டுரங்கனார்** அவர்களுக்கும், இந்நூல் உருவாக்கத்திற்கு துணைபுரிந்த புதுவைப் பல் கலைக்கழக தமிழியல் துறையின் முன்னாள் தலைவரும் திருநெல்வேலி, **மனோன்மணியம் சுந்தரனார்** பல்கலைக் கழகத் துணைவேந்தருமான முனைவர் **க.ப அறவாணன்** அவர்களுக்கும் அன்புகலந்த நன்றிகள்.

மேலும், சமயக் கொள்கைகளைப் பரப்புவதற்கென்று நிதி உதவி அளித்த திருப்பதி தேவத்தான அலுவலர் களுக்கும், புதுவை பிரெஞ்சு நிறுவனத்தினருக்கும் நன்றிகள் நூல் உருவாக்கத்திற்குப் பேருதவி புரிந்த சகோதரர்கள் முனைவர். **சிலம்பு. நா. செல்வராசு, பழ. முருகப்பன்** ஆகியோருக்கும், சகோதரியார். **நா. செங்கமலத் தாயாருக்கும்** துணைநின்ற ஏனைய நன்னெஞ்சங்களுக்கும் எனது நன்றிகள்.

**புதுச்சேரி-3.** **இரா- வசந்தமாலை**



பொற்றாளம் ஏந்திய
திருஞானசம்பந்தர்



திருஞான சம்பந்தரின்
திருமேனித் தோற்றம்

உ
சிவமயம்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனை நாட்பணிந் தேத்தஅருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மான் இவனன்றே.
-ஞானசம்பந்தர்

# முன்னுரை

சிவம் எனும் பரம்பொருளை வழிபடுவதன் வாயிலாக மனிதன் உய்யும் நெறியை விளக்கிக்கூறுவது சைவ சமயமாகும். இச்சைவ சமயம் தென்னாட்டில் நிலவும் தொன்மைச் சமயமென்றும் கூறுவர். கி.பி. ஆறாம் நூற்றாண்டு வரையில் சமணம், பௌத்தம் என்ற புறச்சமயங்களின் செல்வாக்கினால் சைவம் செல்வாக்கிழந்து காணப்பட்டது. இக்காலத்தில்தான் சைவமும் தமிழும் தழைத்தோங்குவதற்காகச் சமயக்குரவர்கள் தமிழகத்தில் தோன்றலாயினர். தமிழிசைக்கு முக்கியத்துவம் கொடுத்து இன்னிசைத்தமிழில் சைவத்தை ஏற்றி நாடெங்கும் சமயத்தைப் பரப்புவாராயினர். சிறு வயதிலேயே இனிய பாசுரங்களின் வாயிலாகத் தமிழுக்கும் சைவத்திற்கும் அருந்தொண்டாற்றியபெருமை ஞானசம்பந்தரையே சாரும். இவரைப் பற்றிய ஆய்விற்குச் செல்வதற்குமுன் இவர்தம் காலம், திருமுறைகள், பதிப்புகள் போன்றவற்றைக் கூறவேண்டிய தன் அவசியம் கருதிச் சுருக்கமாக இங்கு சில பகுதிகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

## 1-1 திருஞானசம்பந்தர் காலம் :

திருஞானசம்பந்தரின் காலம் குறித்து, சைமன் காசி செட்டியார், சி. வை. தாமோதரம் பிள்ளை, கொழும்பு பி. குமாரசாமி, கே. எஸ். சீனுவாசப் பிள்ளை போன்றோர் விளக்கியுள்ளனர். இருப்பினும் இவர்களின் கருத்தை மறுத்து, சுந்தரம் பிள்ளை தமது 'திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம்' என்ற நூலில் சம்பந்தரின் காலம் குறித்துத் தெளிவு படுத்தியுள்ளார். திருஞானசம்பந்தர் கி.பி. 609 - 642 வரையுள்ள காலத்தில் 16 ஆண்டு நில வுலகில் வாழ்ந்து சைவத்தை நிலைநாட்டினர் என்க[1] என்று பல்வேறு காரணங்களைச் சான்று காட்டி குறிப்பிடுவதி லிருந்து ஞானசம்பந்தரின் காலம் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது தெளிவாகிறது.

## 1-2 திருஞானசம்பந்தர் திருமுறைகள்

''திருமுறைகண்ட புராணத்தின் வாயிலாகத் திருஞான சம்பந்தர் அருளிய பதிகங்கள் 16,000 என்பர். இதில் செல் லரித்த சுவடிகள் போக எஞ்சிய சுவடிகளில் ஞான சம்பந்தரின் பதிகங்கள் 384 என்ற அளவிலேயே கிட்டின என்பது 26ஆம் பாடலால் பெறப்படுகிறது. இவற்றோடு திருவிடைவாய் கிளியன்னவூர்ப் பதிகங்கள் உள்பட 385; இவற்றில் இப்போது இதன்வழி கிடைத்துள்ள பாடல் களின் தொகை 4169''[2] ஆகும்.

| | பதிகம் | பாடல் |
|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 |
| இரண்டாம் திருமுறை | 122 | 1331 |
| மூன்றாம் திருமுறை | 127 | 1369 |
| | 385 | 4169 |

## 1-3 தேவாரப் பதிப்புகள் :

''அடிகளைத் தனித்தனியே பிரித்துப் பதிப்பித்தலும், அடிகளைச் சீர் பிரித்துப் பதிப்பித்தலும், முதல் அடியின்

இறுதியிலும் அடுத்த அடியின் முதலிலும் அமைந்த சந்தி களை மட்டும் பிரித்துக்காட்டிப் பதிப்பித்தலும், கடினமான மான சந்திகளைச் சீர்நிலை பிறழாமல் ஒரேவழிப் பிரித்துக் காட்டிப் பதிப்பித்தலும் என்றமுறைகளை நிரலே பின்பற்றி யதால் தேவாரப் பதிப்புகள் செப்பம் பெறுவன ஆயின.

பல நூற்றாண்டுகளாக ஏட்டுச்சுவடிகளிலேயே இருந்த மூவர் தேவாரத் திருமுறைகளைத் திருமயிலை சுப்புராய ஞானியார் என்பவர் 1864இல் காகிதநூல் வடிவில் பதிப்பித்துத் தமிழ் உலகிற்கு வழங்கினார். இவரே திரு ஞானசம்பந்தர் தேவாரத்தின் இரண்டாம் பதிப்பினை, 1875இல் பதிப்பித்து வெளியிட்டார்.

சைவ சித்தாந்த நூல் பதிப்புக் கழகம் கயப்பாக்கம் சதாசிவ செட்டியாரைக் கொண்டு 1927, பிப்ரவரி மாதம் திருஞானசம்பந்தர் தேவாரத்தைப் பண்முறையை ஒட்டி அச்சிட்டு வழங்கியது. பண்முறை தேவாரம் சைவ சித்தாந்த சமாஜத்தின் பதிப்பாக 1929-31இல் மூன்று தொகுப்புகளாக வெளிவந்தது. இளமுருகனார் பதிப்பித்த பண்முறை அடங்கல் முறைத்தேவாரம் மிகச்சிறிய செய்தி களுடன் ஒரே தொகுப்பாக 1953இல் வெளிவந்தது. 1953-1964 வரை தனித்தனி ஏழு திருமுறைகளும் சிறந்த உரை விளக்கங்களுடன் தருமபுர ஆதீனப் பதிப்புகளாக வெளிவந்தன. 1968இல் திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பாகத் தலமுறைத் தேவாரம் முழுமையுடன் ஒரே தொகுப்பாக வெளியிடப்பெற்றது.[3]

திருஞானசம்பந்தர் தேவாரம் தலமுறையை ஒட்டித் திருப்பனந்தாள் மடத்துப் பதிப்பாக 1950, 1961, 1971, 1979ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பெற்றது.

## 1-4 ஆய்வுத் தலைப்பும் ஆய்வின் நோக்கமும் :

'திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம்' என்பது ஆய் வின் தலைப்பாகும். மனிதராகத் தோன்றிய திருஞான

சம்பந்தர் மக்களால் தெய்வ நிலைக்கு உயர்த்தப்பட்டு, வழிபாடு என்ற நிலையில் வைத்துக் கருதப்படுவதையே 'திருஞானசம்பந்தரின் இறைமை நிலையாக்கம்' என்று இங்குக் குறிப்பிடப்படுகின்றது.

வைணவ சமயத்தை நிலைநிறுத்துவதற்காகவும், மக்களின் நல்வாழ்வுக்காகவும் திருமால் பல அவதாரங்களை எடுத்துள்ளார். சைவ சமயத்தில் சிவபெருமான் அடியார் களின் துயர்துடைக்கப் பல்வேறு தோற்றங்களிலும் காட்சி யளித்துள்ளதாகப்புராணங்கள் குறிப்பிடும். கிருத்துவசமயத் தில் போற்றும் இயேசு பெருமானும் இறைவனின் மகன் என்ற நிலையில் மக்களிடையே சிறப்புப் பெறுவதுண்டு. குழந்தைப் பருவத்திலேயே தமது சமயங்களில் உயர்ந்த ஞானத்தைப் பெற்று வாழ்ந்த பிரகலாதன், மார்க்கண் டேயன், திருஞானசம்பந்தர், தொமினிக் சேவியர் போன் றோரையும் இங்கு இறைநிலையடைந்தோர் பட்டியலில் சேர்க்க வேண்டியுள்ளது.

சைவ சமயத்தை வளர்த்த அறுபத்து மூன்று நாயன் மார்களில் குழந்தை நிலையிலேயே பல்வேறு பாசுரங்களைப் பாடியவர் ஞானசம்பந்தராவார். இவர்தாம் வாழ்ந்தகாலம் தொடங்கி இன்றுவரை தலையாய வழிபாட்டுக்கு உரியவரா வதற்கான காரணங்களை வரலாற்று நிலையிலும் தற் போது நிகழ்ந்துவரும் ஞானசம்பந்தரின் வழிபாட்டினை, விழாக்களின் அடிப்படையிலும் எடுத்துரைப்பதே ஆய்வு நூலின் நோக்கமாகும்.

## 1-5 இதுவரை நடைபெற்றுள்ள ஆய்வுகள் :

திருஞானசம்பந்தரைப் பற்றிப் பல ஆய்வுகள் மேற் கொள்ளப்பெற்றிருப்பினும் அவை அனைத்தும் ஞானசம் பந்தரின் பாடல் நோக்கிய ஆய்வாகவே அமைந்துள்ளன. ஆய்வாளருக்குக்கிட்டிய வரையில் சென்னைப் பல்கலைக் கழகத்தின்வாயிலாகத் 'திருஞானசம்பந்தர் தேவாரத்தில்திற னாய்வு' என்ற தலைப்பில் ஆய்வேடு ஒன்றும், மதுரைப்

பல்கலைக் கழகத்தின் வாயிலாகத் 'தேவாரத்தில் புராண மரபுக் கதைகள்' என்ற பெயரில் ஆய்வேடு ஒன்றும் வெளிவந்துள்ளன.

## 1-6 ஆய்வு மூலங்கள் :

### 1-6-1 முதன்மைச் சான்றாதாரங்கள் :

இவ்வாய்விற்கு முதல் மூன்று திருமுறைகள், பெரிய புராணம், பதினோராம் திருமுறை, கோயில் நடைமுறை கள், கல்வெட்டுகள், கள ஆய்வில் கண்டவை போன்றன முதன்மைச்சான்றாதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன.

### 1-6-2 துணைமைச் சான்றாதாரங்கள் :

தேவாரம், திருஞானசம்பந்தர் பற்றிய பிறநூல்கள், சமயக்குரவர்கள் பற்றிய நூல்கள், சமயம் தொடர்பான நூல்கள் போன்றவையும், ஆய்வுக்கட்டுரைகளும், கவிதை களும் துணைமை ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

## 1-7 ஆய்வின் எல்லைகள் :

திருஞானசம்பந்தர் தொடர்பான விழாக்கள் நடை பெறக்கூடிய சீர்காழி, திருக்கோலக்கா போன்ற இடங்கள் எல்லைகளாக வரையறுக்கப் பட்டுள்ளன. புதுவை முத்தியால்பேட்டையில் ஞானசம்பந்தர் விழா ஒன்று நடந் தேறியதால் இவ்விடமும் ஆய்வுஎல்லையாக மேற்கொள்ளப் பட்டுள்ளது. கால அளவைக் கருத்தில்கொண்டு இம்மூன்று இடங்களே கள ஆய்விற்காக எடுத்துக் கொள்ளப்பட்டன. திருஞானசம்பந்தரின் உருவத் திருமேனிகள், புதுவையி லுள்ள பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டுக் கழகம் தொகுத்து வைத்துள்ள புகைப்படங்களின் வாயிலாக ஆராயப்பட்டு உள்ளன.

## 1-8 ஆய்வு அணுகுமுறைகள் :

'ஞானசம்பந்தரின் இறைமையாக்கம்' என்ற தலைப் பில் அமைந்துள்ள இவ்வாய்வு மூன்று நிலைகளில் அணுகப்

படுகின்றது. திருஞானசம்பந்தரின் அருட்செயல்களைப் பற்றிக்கூறுமிடத்து வரலாற்று அணுகுமுறையும், திருஞான சம்பந்தர் வழிபாடு, விழாக்கள் தொடர்பான செய்தி களைக்கூறுமிடத்துத் தொகுப்பாய்வு முறையும், கல்வெட்டுச் செய்திகளில் பகுப்பாய்வு முறையும் பின்பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 1-9 ஆய்வுத் திட்டம் :

1. முன்னுரை
2. திருஞானசம்பந்தரின் வாழ்க்கைக் குறிப்பு
3. திருஞானசம்பந்தரின் அருட்செயல்களுக்குரிய அகப்புறச் சான்றுகள்
4. இலக்கியங்களில் திருஞானசம்பந்தர்
5. திருஞானசம்பந்தரின் விழாக்களும், திருமேனிகளும்
6. திருஞானசம்பந்தர் பற்றிய கல்வெட்டுச் செய்திகள்
7. வழிபாட்டில் திருஞானசம்பந்தர்
8. முடிவுரை

## 1-9-1 முன்னுரை :

முதல் இயலான முன்னுரையில் ஆய்வின் தலைப்பும், ஆய்வின் நோக்கமும், இதுவரை வெளிவந்துள்ள ஆய்வு களும், ஆய்வு மூலங்களும், ஆய்வு எல்லைகளும், ஆய்வு அணுகுமுறைகளும், ஆய்வுத் திட்டமும் விளக்கப்பட் டுள்ளன.

## 1-9-2 திருஞானசம்பந்தரின் வாழ்க்கைக் குறிப்பு :

திருஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றைச் சுந்தரர் நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் போன்றோர் விளக்கி யுள்ளனர். சம்பந்தரின் வரலாற்றை விளக்கும் முறையில் இவர்களுக்குள் வேறுபாடு இருப்பினும் மூவரின் கருத்தை யும் தொகுத்தும் பகுத்தும் வரலாற்று முறையில் எடுத்

தியம்ப இவ்வியல் முனைந்துள்ளது. சம்பந்தரின் வாழ்க்கையில் நடந்தேறிய பல அருட்செயல்கள் சம்பந்தரை வழிபாட்டுக்குரியவராக மாற்றியதால் இவ்வியல், இத்தகைய அருட்செயல்களுக்கு மட்டுமே முக்கியத்துவம் அளித்துள்ளது.

### 1-9-3 திருஞானசம்பந்தரின் அருட்செயல்களுக்குரிய அகப்புறச் சான்றுகள் :

ஞானசம்பந்தர் தான் வாழ்ந்த பதினாறு ஆண்டுகளுக்குள் பல்வேறு அருட்செயல்களைப் புரிந்துள்ளதாக வரலாறு கூறும். இத்தகைய அருட்செயல்களுக்குரிய சமயச்சான்றுகளை ஞானசம்பந்தரின் தேவாரப் பாசுரங்களின் வாயிலாகவும் புறச்சான்றுகளைத் திருத்தொண்டத்தொகை, பதினோராம் திருமுறை மற்றும் பெரியபுராணம் ஆகியவற்றின் வாயிலாகவும் ஆராய இவ்வியல் முயல்கின்றது. சம்பந்தரின் காலத்திற்குப்பின் பரவலாக இவர்தம் வாழ்க்கையை எடுத்துரைத்த காரணத்தால் இம்மூன்று நூல்கள் மட்டுமே புறச்சான்றுகளைத் திரட்டுதலின் பொருட்டு ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

### 1-9-4 இலக்கியங்களில் திருஞானசம்பந்தர் :

சேக்கிழாருக்குப் பிறகு தோன்றிய பிள்ளைத்தமிழ், பரணி, குறவஞ்சி, உலாபோன்ற சிற்றிலக்கியங்களிலும் ஞானசம்பந்தரைப்பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவை தவிரத் திருக்களிற்றுப்படியார், நால்வர் நான்மணிமாலை, திருத்தொண்டர்மாலை, திருப்புகழ், திருவருட்பா, குமரகுருபரரின் பிரபந்தத்திரட்டு போன்ற இலக்கியங்களின் வாயிலாக ஞானசம்பந்தரைப்பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. ஆகமங்கள், வடநூல்கள், தற்காலக்கவிதை முதலியவற்றில் ஞானசம்பந்தர் பெற்ற இடம் இவ்வியல் உள்ளே தொகுத்துரைக்கப்படுகின்றன. இவ்வியலின்கண் எடுத்துரைக்கப்படும் நூல்களில் பிள்ளைத்தமிழ் மட்டுமே ஞானசம்பந்தரைப்பற்றிப் பரவலாகக் குறிப்பிட்டுள்ளது.

## 1-9-5 திருஞானசம்பந்தரின் விழாக்களும், திருமேனிகளும் :

வழிபாடு என்பது இறைத்தன்மை பொருந்தியவர் களுக்கு மட்டுமே எடுக்கப்படுவதாகும். ஞானசம்பந்தரை இறைநிலைப் படுத்தியதன் விளைவாகச் சில இடங்களில் விழாக்கள் நடத்தப்பெற்று வருகின்றன. இவ்வியலில் ஞானசம்பந்தருக்கு எடுக்கப்படுகின்ற சீர்காழி 'திருமுலைப்பால் உற்சவம்' திருக்கோலக்கா 'பொற்றாளம் பெறும் நிகழ்ச்சி' மற்றும் ஆச்சாள்புரம் 'நல்லூர்ப் பெரு மணம்' ஆகிய நிகழ்ச்சிகள் விளக்கப்படுகின்றன. 'திருமுறை முற்றோதல்' எனும் நிகழ்ச்சி நால்வருக்கும் உரியதாயினும் புதுவையில் நடைபெற்றபோது அவ்விழா சம்பந்தருக்குரிய ஒன்றாக விளங்கியமையால் அந்நிகழ்ச்சியைப் பற்றியும் விளக்க இவ்வியல் முனைந்துள்ளது. திருஞானசம்பந்தரின் உருவத்தில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி நிலைகள், மாற்றங்கள் குறித்தும் இவ்வியல் விளக்குகின்றது.

## 1-9-6 திருஞானசம்பந்தர் பற்றிய கல்வெட்டுச் செய்திகள் :

திருஞானசம்பந்தரைப்பற்றி ஆராய்வதற்கு இலக்கியத் திற்கு அடுத்தபடியாகக் கல்வெட்டுகளே துணைபுரிந்து வருகின்றன. இத்தகைய கல்வெட்டுகளின் வாயிலாகத் தெரியவரும் ஞானசம்பந்தரின் பெயர்கள், திருமேனிகள், மடங்கள், இறையிலி நிலங்கள், திருநந்தவனம், ஞானசம் பந்தரின் பாசுரச்சொற்கள் குறித்த செய்திகள் போன்ற வற்றை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

## 1-9-7 வழிபாட்டில் திருஞானசம்பந்தர் :

இவ்வியலில் ஞானசம்பந்தரின் வழிபாட்டிற்குரிய கார ணங்கள் என்ன என்பது எடுத்துரைக்கப்படுகின்றன. ஞான சம்பந்தரை இறைநிலைப் படுத்துவதற்கு முக்கிய காரண மான 'முருகன் அவதாரம்' என்ற கருத்தை முன்வைப்பதற்

கான சூழ்நிலைகள் விளக்கப்பட்டுள்ளன, ஞான சம்பந்தருக்கும் முருகப் பெருமானுக்கும் இடையே இருக்கக் கூடிய பெயர்ப்பொருத்தம், இலக்கியங்களின்வழி திருஞான சம்பந்தர் முருகப்பெருமானே என்று கூறுவதற்கு ஆதார மான அடிகள் போன்றவை ஆராயப்பட்டுள்ளன. மேலும் அடியார் வழிபாடு, குருவழிபாடு போன்றவற்றில் ஞான சம்பந்தரின் பங்கு என்ன என்பது குறித்தும் இவ்வியல் ஆராய்கின்றது.

## 1-9-8 முடிவுரை :

ஆய்வாளரால்தமது ஆய்வின் வழிகண்டறிந்த முடிவுகள் இவ்வியலில் நிரல்படத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## 1-9-9 பின்னிணைப்புகள் :

நிறைவாக ஆய்வு தொடர்பான பின்னிணைப்புகள் ஆய்வுநூலில் இணைக்கப்பட்டுள்ளன. இதில் திருஞான சம்பந்தர் விழாக்கள் குறித்த புகைப்படங்கள், சம்பந்தரின் உருவங்கள் முதலியன இடம் பெற்றுள்ளன.

## குறிப்புகள்

1. ஔவை, துரைசாமி பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, ப. 63.
2. தேவாரம் பண்முறை பகுதி - 1, முன்னுரை, ப. 23.
3. மேலது, பக். 32 - 35.

★★★

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி கண்டீர் - நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்.

-நம்பியாண்டார் நம்பி

# திருஞானசம்பந்தரின் வாழ்க்கைக் குறிப்பு

## 2-0 முன்னுரை :

சிவன் அருளால் அம்மையின் ஞானப்பால் உண்டதனால் 'பிள்ளையார்' என்றும் 'திருஞானசம்பந்தன்' என்றும் அழைக்கப்படும் சம்பந்தர் நாயன்மார்களில் ஒப்பற்ற ஒருவராவார். இவர் சைவ நெறி பின் தள்ளப்பட்டுப் பிற புறச்சமயங்கள் மேலோங்கிய அக்கால கட்டத்தில் சைவம் தழைக்க அரும்பாடுபட்டவர்.

ஞானசம்பந்தரின் வரலாற்றுக் குறிப்பினைச் சுந்தரர் மற்றும் நம்பியாண்டார் நம்பி போன்றோர் குறிப்பிட்டிருப்பினும், சம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கமாக எடுத்துரைத்தவர் சேக்கிழாரே ஆவார். சேக்கிழார் தம் பெரியபுராணத்தின் 4286 செய்யுட்களில், சம்பந்தரின் வாழ்க்கையை 1256 செய்யுட்களில் விளக்கியுள்ளார்.

பெரியபுராணம் ஞானசம்பந்தரின் பிறப்பு முதல் சோதியில் கலந்தது வரையிலான செய்தியை விளக்கமாகக் கூறினும், சில முக்கிய நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கவில்லை. இருப்பினும், சேக்கிழாரின் பெரியபுராணத்தையும் பிற நூல்களையும் அடியொற்றியே இவ்வியல் ஞானசம்பந்தரின் வாழ்க்கையைச் சுருக்கமாகக் கூற முற்பட்டுள்ளது.

## 2-1 ஞானசம்பந்தரின் பிறப்பு வரலாறு :

சோழ நாட்டில் சீகாழிப்பதியில் சிவபாதவிருதயர் என்ற அந்தணர் வாழ்ந்து வருகின்றார். இவரது மனைவி பகவதியார் என்பவராவார். கவுணிய கோத்திரத்தைச் சேர்ந்த இவர்கள் சிவன்பால் மிக்க அன்புடையவர்களாகத் திகழ்ந்தனர். எனவே தான் புத்த சமண சமயவுணர்வு பெரிதும் பரவியிருந்த அக்காலத்தே திருநீற்றின் ஒளியைத் திசையெலாம் பரப்பவேண்டும் என்ற பேரார்வம் உடையவர்களாக இருந்தனர். இதனால் சைவத்தைச்சீரிய நிலையில் நிலைநிறுத்த வல்ல மகனைப் பெறவேண்டும் என்று தோணிபுரத்து ஈசனை வழிபட்டு அரிய பல நோன்புகளை இயற்றுகின்றனர். இதன் பயனாகப் பகவதியார் மகப்பேற்றுக்கு உரியவராகித் திருஞானசம்பந்தரைப் பெற்றெடுக்கின்றார்.

இங்ஙனம் தோன்றிய பிள்ளையின் வளர்ப்பைச் சேக்கிழார் போற்றியுரைப்பார். சம்பந்தருக்குத் தொட்டிலமர்வித்தல் போன்ற நிக்ழ்ச்சிகள் நடந்தேறுகின்றன. அன்னையார் ஞானசம்பந்தக் குழந்தைக்குப் பாலூட்டும் பொழுதெல்லாம் சிவன்பால் மிக்க அன்புடையவரானார். இந்த அன்பு, அவர் பாலில் ஊறி ஞானசம்பந்தர் உடலையும் உயிரையும் அடைய, சிவத்தின்மீது பற்றுடையவராக வளர்கின்றார்.

## 2-2 ஞானசம்பந்தராதல் :

பிள்ளையார் வாழ்வில் நிகழ்ந்த முதல் அற்புத நிகழ்ச்சி ஞானப்பால் உண்டதாகும். வேதநெறியுடன் நீராடி வரு

வதற்குத் திருக்கோயிலுள்ள பிரம்மதீர்த்தத்தை நோக்கிப் புறப்படுகிறார் சிவபாத இருதயர். பிள்ளையாரும் இவரது காலைப் பற்றிக்கொண்டு வருவதற்கு அடம்பிடிக்கிறார். 'உன் செய்கை இதுவாகில் உடன் வருக' என்று கூறித் தந்தையும் அவரை அழைத்துச் செல்கிறார். சம்பந்தரைக் குளக்கரையில் உட்காரவைத்துப்பின் நீருள் மூழ்கி, 'அகமர்ஷணம்' என்னும் திருமந்திரத்தைச் செபித்துக் கொண்டிருந்தார். அங்ஙனம் மூழ்கியதும் தந்தையைக் காணாமல் 'அம்மே' 'அப்பா' எனத்தேம்பலுற்று அழுகின்றார் பிள்ளையார்.

இச்சமயத்தில் சிவபெருமான் விடையின்மேல் எழுந்தருளி அம்மையிடம் 'துணைமுலைகள் பொழிகின்ற பாலடிசிலைப் பொன்வள்ளத்திலே ஊட்டுக' எனப்பணிக்க அம்மையும் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் கரந்தருளிச் சிவஞானமாகிய அமிழ்தத்தையும் குழைத்துப்பிள்ளையார் கையில் கொடுத்து அவரது அழுகையைத் தீர்த்துப் பாலடிசிலை ஊட்டியருளுகின்றார், இங்ஙனம் அம்மை அப்பரால் ஆட்கொள்ளப்பெற்றமையால் 'ஆளுடைய பிள்ளையார்' எனவும் கிடைத்தற்கரிய ஞானத்தைப் பெற்றமையால் திருஞானசம்பந்தர் எனவும் போற்றப்பெறுகின்றார்.

இந்நிலையில் கரைதிரும்பிய சிவபாத இருதயர் பிள்ளையாரின் செவ்வாயிதழின் இருமருங்கும் பால்வழிந்து கொண்டிருப்பதைக்கண்டு 'நீ யார் தந்த பாலை உண்டாய்? எச்சில் மயங்கிட உனக்கு இது இட்டாரைக்காட்டுக' என வெகுண்டு சிறுகோல் கொண்டு அடிப்பதற்கு கையை ஓங்குகிறார். பிள்ளையார் தன் சிறு விரலால் தோணிபுரத்து இறைவனைச் சுட்டிக்காட்டி 'தோடுடைய செவியன்' எனும் திருப்பாடலைப்பாடி இறைவனைத் தம் தந்தைக்கு அடையாளங்களுடன் குறிப்பிட்டு இறுதியில் 'திருக்கடைக்காப்பு'ச் சார்த்திக் கோயிலுக்குள் எழுந்தருளினார். தந்தையாரோ இறைவன் திருவுருவைக் காண வில்லையெனினும் 'பிரமபுரத்தான் திருவருள்' என்று துணிந்து திருமகனாரின் பின் செல்கிறார்.

## 2-3 பொற்றாளம் பெறுதல் :

உமையம்மையார் அளித்த பாலடிசிலுண்டு கவிபாடிய காழிப் பிள்ளையார் கோலக்கா என்னும் ஊரில் எழுந்தருளி யுள்ள பெருமானைக் காண வருகின்றார். இறைவன் முன்னின்று,

> "மடையில் வாளை பாய மாதரார்
> குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
> சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீழ்
> உடையுங் கொண்ட உருவ மென்கொலோ" 1

-எனத்தொடங்கும் பாடலைப்பாட, இறைவர் பிள்ளை யாரின் கைநோகும் என எண்ணித் திருவைந்தெழுத்துப் பொறிக்கப்பட்ட பொற்றாளத்தினைக் கைகளில் பொருந் தும்படி அளிக்கிறார். பொற்றாளத்தில் ஓசை உண்டாகாது என்பதினால் அம்மையார் இத்தாளத்திற்கு ஓசை கொடுக் கிறார். பின் ஓசையை எழுப்பித் தாளமிட்டு உலகவர் வியக் கும் வண்ணம் மற்றைய பாடல்களையும் பாடுகின்றார்.

## 2-4 பாலை நெய்தல் பாடியது :

திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்ற சம்பந்தரின் பெருமை நாடெங்கும் பரவியது. சீகாழிக்கு அருகிலுள்ள சம்பந்தரின் தாயார் பிறந்த ஊரான 'நனி பள்ளிக்கும், இவரது பெருமை பரவியது. அவ்வூரிலுள்ள பலர் ஞான சம்பந்தரின் அற்புதம் கண்டு வியந்து தமது ஊருக்கு எழுந் தருள வேண்டுமென வேண்டிக்கொள்ள அவ்வேண்டுகோளுக் கிணங்கி, ஞானசம்பந்தரும் தனது பயணத்தைத் தொடங்கு கின்றார். சிறிய பாதங்கள் வருந்த நடப்பதைக் கண்ட சிவபாதவிருதயர் பிள்ளையாரைத் தமது தோளின்மேல் அமர்த்திக் கொண்டு செல்வாராயினர். 'எதிரே தோன் றும் இப்பதி யாது?' எனத்தந்தையை வினவத் தந்தையும் 'திருநனிப்பள்ளி' என்கிறார். தந்தையின் தோளின்மீது அமர்ந்துகொண்டே அப்பதியை வணங்கி,

''காரைகள் கூகைமுல்லை களவாகையீகை
படர்தொரி கள்ளி கவிழ்ச்
சூரைகள்பம்ம விம்மு சுடுகாடமர்ந்த
சிவன்மேய சோலை நகர்தான்
தேரைக ளாரைசாய மிதிகொள்ளவாளை
குதிகொள்ள வள்ளை துவள
நாரைகள் ஆரல்வாரி தயன்மேதிவைகு
நனிபள்ளி போலு நமர்காள்'' 2

-என்ற பாடலைப் பாடுகின்றார். பாடலின் முதலிரண்டடிகளில் பாலை நிலத்தின் இயல்பும், பின்னிரண்டடிகளில் நெய்தல் நிலத்தியல்பும் கூறிப் பாலை நிலத்தினை வளமுடைய நெய்தல் நிலமாக மாற்றியருளினார்.

## 2-5 திருநீலகண்ட யாழ்ப்பாணருடன் தொடர்பு:

திருநனிப்பள்ளியிறைவனை வணங்கிப்போற்றிய ஞானசம்பந்தர் பல தலங்களை வழிபட்டு மீண்டும் சீகாழிக்கே வந்து சேர்கின்றார். இச்சமயத்தில் திருநீலகண்ட யாழ்ப்பாணரும், இவர்தம் மனைவியாராகிய மதங்க சூளாமணியாரும் சிவஞானம் பெற்ற குழந்தையாகிய ஞானசம்பந்தரைக்காணும் பொருட்டுச் சீகாழியை வந்தடைகின்றனர். ஞானசம்பந்தரும் பெரும்பாணரின் புகழைக் கேள்விப்பட்டிருந்தவராகையால், அவரை உளமார வரவேற்கிறார். பின் இருவரும் தோணியப்பரை வழிபட்டு நிற்கின்றனர். பிள்ளையார் யாழ்ப்பாணரை நோக்கி 'ஐயா, இசையமைந்த யாழினை உங்கள் இறைவர்க்கு இயற்றுமின்' என்றுகூற, பாணரும் தம் துணைவியாருடன் பாடி யாழிசைக்கிறார், சம்பந்தர் இசையமுதைப் பருகிப்பாராட்டுந் தெரிவிக்கின்றார்.

பின்னர், இருவருக்கும் விருந்தளித்து, தனி இல்லம் அமைத்துக் கொடுக்கின்றார். பிள்ளையார் அதுகாறும் பாடியருளிய திருப்பதிகங்களைக் கேட்டு பாணரும் மகிழ்கின்றார். அவற்றைத் தம் யாழின் முறைமையில் வாசித்து

மகிழ்கின்றார். 'இசைப்பாடலுக்கு அடியேன் யாழ் வாசிக்கும் பணியை நிரந்தரமாகவே வேண்டுகின்றேன்' என்று கேட்க, பிள்ளையாரும் அதற்குச் சம்மதம் தெரிவிக்கின்றார். அன்றையிலிருந்து ஞானசம்பந்தரின் பாடலுக்குப் பெரும்பாணர் யாழ் வாசிக்கும் உரிமையைப் பெற்றார்.

## 2.6 முத்துச்சிவிகை, குடை, சின்னம் பெறுதல் :

ஞானசம்பந்தர் திருநெல்வாயில் அரத்துறையில் உள்ள இறைவனைக்காணும் பொருட்டு நடந்தே செல்கிறார். செல்லும் வழியில் அன்றிரவு பிள்ளையாரும் அடியவர்களும் 'மாறன்பாடி' என்ற ஊரில் தங்குகின்றனர்.

பிள்ளையாரது வழிநடை வருத்தத்தைக் கண்ட அரத்துறை யீசன் நெல்வாயிலிருள்ள மறையோரின் கனவில் தோன்றி 'ஞானசம்பந்தன் நம்மை நோக்கி வருகிறான். அவனுக்கென முத்துச்சிவிகை, குடை, சின்னம் ஆகியவற்றைக் கொடுப்பீர்களாக' என அருள்செய்து மறைகிறான். விழித்தெழுந்த மறையோர் கோயிலைத் திறக்க அங்குச் சிவிகை, முத்துக்குடை, சின்னம் இருப்பதைக்கண்டு வியந்து பின்னர் ஞானசம்பந்தரிடம் அவற்றை எடுத்துக்கொண்டு சென்றனர். இறைவனார், கனவில் தோன்றிக் கூறியவற்றை மறையோர்கள் அப்படியே, ஞானசம்பந்தரிடங் கூற, ஆளுடைய பிள்ளையாரும் இறைவனது பேரருளை நினைத்து,

''எந்தை யீசனெம் பெருமான் ஏறமர் கடவுளென்றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவதென்றால்
கந்த மாமலர் உந்திக் கடும்புனல் நிவாமல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறையடிகள்தம்
அருளே'' 3

-என்னும் திருப்பாடலைப்பாடி இறைவனைப் புகழ்கின்றார் பின் திருவைந்தெழுத்தினை ஓதி முத்துச்சிவிகையில் ஏறியமர்ந்தார். இறைவனால் அளிக்கப்பட்ட குடை நிழலில் திருச்சின்னம் ஊதத் திருநெல்வாயில் அரத்துறையில் இறைவனைப்போற்றி வணங்கி நின்றார்.

## 2-7 உபநயனச் சடங்கு

திருஞானசம்பந்தருக்கு வேதவிதிப்படி உபநயனச் சடங்கு நடந்தது. முப்புரி நூலினை அணிந்த மறையோர்களுக்குப் பிள்ளையார் தம்முடைய புனித வாக்கால் உன்னற்கரிய வேதங்களை ஓதினார். ஞானசம்பந்தரின் திறனை அறிந்து, மறைகளில் தங்களுக்குண்டான ஐயங்களைப் பிள்ளையாரிடம் கேட்டுத்தெளிவு பெற்றார்கள். மறையோர்கள் மந்திரங்கள் தோன்றுவதற்கு அடிப்படையான திருவைந்தெழுத்தின் பெருமைகளை விளக்கியபோது,

''துஞ்சலும் துஞ்சலி லாதபோழ்திலும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தோறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே'' 4

-என்ற பாடல்பாடிப் பஞ்சாக்கரத் திருப்பதிகத்தைப் பாடினார். நான்மறையை ஓதவல்ல மறையோர்கள் குறிப்பாக அந்திக்காலங்களில் ஓதவேண்டிய மந்திரம் திருவைந்தெழுத்தே என அறிவுறுத்தினார். இதனை,

''மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே'' 5

-என்ற திருப்பாடலால் அறியலாம்.

## 2-8 திருநாவுக்கரசர் நட்பு :

உபநயனச் சடங்கு முடிந்து பிள்ளையார் சீகாழிப்பதியில் தங்கியிருந்தபோது, நாவுக்கரசர் அவரைக்காண வருகின்றார். முன்னரே நாவுக்கரசரைப்பற்றிக் கேள்வியுற்ற சம்பந்தர் அவரை உள்ளன்போடு 'அப்பரே' என விளித்து வரவேற்றார். தொண்டே பெரிதெனக்கொண்ட உழவாரப் படையும், இறைவனை வணங்குதலால் உகும் கண்ணீரும், பொன்மேனியில் இலங்கு திருவெண்ணீரும் உடையவராய்ச்

சிவவேடத்தோடு தோன்றுகிறார். இவரைக் கண்டதும் இது வரை தமது உள்ளத்திலே எழுதிப்போற்றப்பெற்ற தொண்டர் திருவேடமே திருநாவுக்கரசர் வடிவில் எழுந்தருளி யுள்ளதுஎன எண்ணிப்போற்றுகின்றார். பின்னர் அப்பரைத் திருத்தோணிபுரக் கோயிலுக்கு அழைத்துச் செல்கிறார். நாவுக்கரசர் சீகாழியில் சில நாட்கள் தங்கியபின் விடை பெற்று மீண்டார்.

திருஞானசம்பந்தர் சீகாழியில் தங்கியிருந்த காலங்களில் மொழிமாற்று, மாலைமாற்று, வழிமொழி, மடக்கு, இயமகம், ஏகபாதம், இருக்குக்குறள், எழுகூற்றிருக்கை, ஈரடி மேல்வைப்பு, நாலடி மேல்வைப்பு, முடுகியலாகிய திருவிராகம், சக்கரம் முதலியவற்றால் திருத்தோணிபுரத்து இறைவனை வணங்கி நின்றார். இத்தகு திருப்பதிகங்களை எல்லாம் திருநீலகண்ட யாழ்ப்பாணரும், அவர் மனைவியாரும் யாழிலிட்டுப் பாடிப் போற்றினார்கள்.

## 2-9 முயலகன் நோய் தீர்த்தல் :

திருஞானசம்பந்தர் தமது அடியார்களுடன் பல தலங்களுக்கும் சென்று இறைவனைக்கண்டு வழிபட்டு மழ நாட்டிலுள்ள திருப்பாச்சிலாச்சிரமம் என்ற ஊரினை அடைகின்றார். இந்நகரின் குறுநிலமன்னன் கொல்லிமழவன் என்பானாவான். இவன், தன் மகள் முயலகன் என்னும் நோயினால் வாடுவதைக்கண்டு, இறைவன் திருவடியே துணையெனக்கொண்டு திருப்பாச்சிலாச்சிரமத்து இறைவர் முன் இட்டு வைத்தனன். இச்சமத்தில் பிள்ளையார் சிவிகையினின்று இறங்கித் திருக்கோயிலை வழிபடச் செல்லும்போது இக்காட்சியைக்கண்டு, 'இஃது என்ன?' என வினவினார். அதுகேட்ட கொல்லிமழவன், 'இவள் என் மகள், இவளை முயலகன் என்னும் நோய் வருத்துவதால் இறைவனின் முன் கிடத்தி வைத்தேன்' என்றான். உடனே, இறைவனைப் பணிந்தவாறு ஞானசம்பந்தர்,

''துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச்
சுடர்ச் சடை சுற்றி முடித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ்சூழ
ஆரிடமும்பலி தேர்வர்
அணிவளர் கண்டரோ மங்கையைவாட
மயல் செய்வதோ இவர் மாண்பே''6

-என்ற திருப்பதிகம் பாடி, 'பெருமான் தன்னை வழிபடும் இளநங்கையாகிய இவளை நோயால் மெலிய வைத்தல் மாண்பாகுமோ' என கேட்டவாறு போற்றினார். அந் நிலையில் மழவன் மகள் நோய் தீர்ந்து உணர்வுற்று எழுந் தாள். பின்னர் தந்தையும் - மகளும் ஞானசம்பந்தரை வணங்கிப் போற்றினர்.

## 2-10 பனி நோய் தீர்த்தல் :

பல தலங்களுக்குச் சென்று இறைவனைப் பாடிப்புகழ் வதிலேயே இன்பமுற்ற ஞானசம்பந்தர் திருச்செங்குன்றூர் வந்தடைந்தார். அப்போது பனிக் காலமாதலால் அந்நாட் டியல்பின்படி, தோன்றக்கூடிய பனிநோய் என்று அழைக் கப்பட்ட சுரநோய் ஆளுடைய பிள்ளையின் அடியார்களை யும் வருத்தத் தொடங்கியது. இதனை அறிந்த சம்பந்தர் உலகினை அழிக்கவந்த கொடிய நஞ்சை உண்டு மிடற்றில் வைத்து உலகைக்காத்த இறைவன் சிவபெருமானாதலால் அவன் மீது நம்பிக்கை வைத்து,

'அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு மஃதறிவீ;
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீலகண்டம்'7

-என்ற பாடலையிசைத்து இறைவனை வேண்ட, பனிநோய் அடியார்க்கு மட்டுமின்றிக் கொங்கு நாடு முழுவதும் தீர்ந்தொழிந்தது.

## 2-11 முத்துப்பந்தர் பெறுதல் :

ஞானசம்பந்தர் திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுத் திருவலஞ்சுழியை வந்தடைகின்றார். அப்பொழுது முது வேனிற் பருவமாதலால் கடும் வெயிலையும் பொருட்படுத் தாது அடியார்களுடன் திருவலஞ்சுழி இறைவரைக்காண விருப்புடன் சென்றார் சம்பந்தர். அம்மையின் ஞானப்பால் உண்ட குழந்தையாதலால் சிவபூதங்கள் வானத்திலே மறைந்துநின்று பிள்ளையாரின் முடிமீது முத்துப்பந்தரினைப் பிடித்து 'எம்மை விடுத்து அருள்புரிந்தார் பட்டீசர்' என்று கூறின. ஞானசம்பந்தரும் இதனை ஏற்றுக்கொண்டு இறை வனின் திருவருளை நினைந்து மகிழ்ந்தார். அடியார்கள் வானத்திலிருந்து இறங்கும் முத்துப்பந்தரைக் கைக்கொண்டு விரித்துப் பிடித்தார்கள். சம்பந்தரும் இந்நிழலை இறைவன் ஈசனின் திருவடி நிழல் எனக்கருதி இனிதமர்ந்து அடியார் கள் புடைசூழத் திருப்பட்டீச்சரத் திருக்கோயிலை அடைந்து

''பாடன்மறை சூடல்மதி பல்வளையொர் பாகமதின் மூன்றொர் கணையால்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில் சூழ்பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டி வினை வீடுமவரே''8

-என்று இறைவனைப் பாடிப் பரவினார்.

## 2-12 உலவாக்கிழி பெறுதல் :

பிள்ளையார் பட்டீச்சுரத்தினின்று புறப்பட்டுத் திருவா வடுதுறையை அடைகின்றார். அங்கு ஆவடுதுறை இறை வனை வழிபட்டுப்பின் மடம் ஒன்றில் தங்கியிருக்கையில் பிள்ளையாரின் தந்தையார் சீகாழியிலிருந்து புறப்பட்டு வந்து சம்பந்தரிடம் வைதிக வேள்வி செய்வதற்கு வேண்டு பொருள் எதிர்பார்த்து நின்றார். அவரது வேண்டுகோட் கிணங்க ஞானசம்பந்தரும்,

''இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உன்கழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின் னருள் ஆவடுதுறை அரனே''9

-என்று பாடுகின்றார். இவ்வாறு பாடுகின்றபோது இறைவனது திருவருளால் சிவபூதம் ஒன்று தோன்றுகிறது. ஆயிரம் பொன் அடங்கிய பொற்கிழியொன்றை இறைவன் கோயில் பீடத்தின்மேல் வைத்து 'இப்பொற்கிழியானது எடுக்க எடுக்கக் குறையாத உலவாக்கிழி. இறைவரருளால் உமக்கு அளிக்கப்பெற்றதாகும்' எனக்கூறி மறைந்தது. ஆளுடையப் பிள்ளை அப்பொன் முடிப்பினைத் தந்தையாரிடம் கொடுத்து 'முழுமுதற் பொருளாகிய சிவபெருமான் ஒருவனையே முதல்வனாகக் கொண்டு பண்டை மறை முறைப்படி செய்தற்குரிய நல்ல வேள்விகளை நீவீர்செய்தற்கு மட்டுமின்றி, வேணுபுரத்திலுள்ள வேதியர் அனைவரும் செய்தற்கும் வேண்டும் பொன்களை, மேன்மேலும் தந்து வளர்வது இவ்வுலவாக்கிழி' என்று கூறித் தந்தைக்கு விடை கொடுக்கத் தந்தையும் பொற்கிழியுடன் சீகாழி நோக்கித் திரும்பினார்.

## 2-13 யாழ்முரிப் பாடியது :

தருமபுரத்தில், திருநீலகண்ட யாழ்ப்பாணர் தம் சுற்றத்தார்களிடம் ஞானசம்பந்தர்க்குத் தான் யாழ்வாசித்துவரும் செய்தியினை எடுத்துரைத்து மகிழ்ந்தார். இதனைக்கேட்ட உறவினர்கள் 'நீவிர் திருப்பதிகத்தை யாழிலிட்டுத் தக்க முறையில் வாசிப்பதனால் அதன் இசை யாண்டும் பரவுவதாயிற்று' எனக் கூறினர். இவ்வுரையைக் கேட்ட திருநீலகண்டப்பெரும்பாணர் அதிர்ச்சியடைந்தார். தோணிபுரத்திறைவன் அருளால் பெறற்கரிய இசை ஞானத்தைப்பெற்ற சம்பந்தரின் பாடல்கள், தம்முடைய யாழின் மூலமாகப் பெருமையடைந்தன என்ற சொற்களைப் பாணரால்

ஏற்றுக்கொள்ள இயலவில்லை. எனவே, சம்பந்தப் பெரு மானைப் பணிந்து, திருப்பதிகத்தின் இசை யாழினை அள வில் அடங்காத் தன்மையதென்பதனைச் சுற்றத்தாரும், பிறரும் அறிந்துகொள்ளும்படி ஒரு திருப்பதிகம் பாடியருளு மாறு வேண்டி நின்றார். ஞானசம்பந்தரும்,

''மாதர் மடப்பிடியும் மடஅன்னமும் அன்னதோர்
நடையுடையும் மலைமகள் துணையென மகிழ்வர்
பூத இனப்படை நின்றிசை பாடவும் ஆடுவர்
அவர்படர் சடைநெடு முடியதொர் புலவர்
வேத மொடேழிசை பாடுவராழ்கடல் வெண்டிரை
யிரைந்துரை கரைபொருது விம்மி நின்றயலே
தாத விழ்புன்னை தயங்குமலர்ச் சிறை வண்டறை
யெழில்பொழில் குயில்பயில் தருமபுரம்பதியே''10

-என்று தொடங்கி பதிகப் பாடல்களைப் பாடுகின்றார். பாணரும் தம் கையிலுள்ள யாழினால் திருப்பாடலுக்கு இசைமீட்ட அதன் இசை யாழில் அடங்காமல் போனது. இதையுணர்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் நடுக்கமும், நாணமும் உற்றுப் பிள்ளையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, 'தங்களுடைய திருப்பதிகத்தின் இசையின் பெரு மையை அறியாது கூறுவதற்குக் காரணமாயிருந்த யாழினை தொடுவது பிழையன்றோ' என்று சொல்லித் தம் கையி லுள்ள யாழினை உடைக்க ஓங்கினார். சம்பந்தர் இதனைத் தடுத்தருளி, யாழைத் தம் கையில் வாங்கிக்கொண்டு 'ஐயரே! நீவிர் யாழை முறிக்கப் புகுதல் முறையா? சிவ பெருமானின் திருவருட் பெருமையெல்லாம் இக்கருவியில் அடங்குதல் என்பது இயலுமா? எனவே இந்த யாழினைக் கொண்டே திருப்பதிக இசையினை வாசிப்பீராக' என்று கூறப்பாணரும் இதனைஏற்றுக்கொண்டு யாழிசைத் தொண் டினைத் தொடருகின்றார். இவ்வாறு யாழ் முறிவதற்குக் காரணமான பண்ணினால் பாடப்பெற்றமையால் இப்பண் 'யாழ்முரிப்பண்' என்று அழைக்கப்படுகின்றது.

## 2-14 விடம் தீர்த்தல் :

திருஞானசம்பந்தர் இறைவனை வழிபடும் பொருட்டுத் திருமருகலை வந்தடைகின்றார். இத்தலத்தில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சியொன்று விடம் தீர்த்ததாகும். அந்நாளில் வணிகன் ஒருவன் தனக்குரிய முறைப்பெண்ணொருத்தியைத் திருமணம் செய்து கொள்ளுதற்பொருட்டு தன்னுடைய ஊருக்கு அழைத்துச் செல்கிறான். இரவில் தங்கிய திருமருகல் மடத்தில் அரவம் ஒன்று தீண்ட சோர்ந்து வீழ்ந்தான். உடன் வந்த அப்பெண் சிவபெருமானை நினைத்து அழுது முறையிட, அவ்வழியே வந்த சம்பந்தர் காரணம் கேட்கிறார். 'என் தந்தை வைப்பூரில் உள்ள தாமன் என்பான், அரவு தீண்டியிறந்தஇவன் எந்தையின் மருமகன்; எந்தைக்கு என்னுடன் பிறந்த மகளிர் எழுவர்; அவருள் மூத்த மகளை இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதாக்க் கூறிய எந்தை, பொருளாசையாற் பிறனொருவனுக்கு மணம் புரிவித்து விட்டான். ஏனையமகளிரும் இவ்வாறே மணம் செய்விக்கப் பட்டனர். இவனுக்காக வருந்தி, உறவினர்கள் அறியாத படி இல்லத்தைவிட்டு வெளியேறினேன். இப்போது இவரும் அரவம் தீண்டியிறந்து விட்டார்' என்று தன்னுறு துயரை விளக்கினாள். இதைக்கேட்டு வருந்திய சம்பந்தர், திருமருகலில் எழுந்தருளியிருக்கும் சிவனை வணங்கி, கன்னியின் வருத்தத்தைக் களையுமாறு வேண்டினார்.

> ''சடையாய் எனுமால்; சரண்நீ எனுமால்;
> விடையாய் எனுமால்; வெருவா விழுமால்
> மடையார் குவளை மலரும் மருகல்
> உடையாய் தகுமோ இவளுண் மெலிவே''11

-என்று பாசுரங்களைப் பாட அரவம் தீண்டப்பெற்ற இளைஞன் விடம் தீர்ந்து எழுகின்றான். பின் அப்பெண் மகளும் வணிகனும் ஞானசம்பந்தரின் திருவடிகளில் விழுந்து வணங்கினர். பிள்ளையாரும் இருவருக்கும் மணம் புரிவித்துப் பெருவாழ்வை வகுத்தளிக்கின்றார்.

## 2-15 படிக்காசு பெறுதல் :

ஞானசம்பந்தர் அடியார்களின் திருக்கூட்டம் புடைசூழத் திருவீழி மிழலையில் நாவுக்கரசருடன் தங்கியிருக்கின்றனர். மாரி வளங்குன்ற மக்கள் துன்புற்றனர். சிவனடியார்களும் பிற நல்லுயிர்களும் பசியால் வாடும் நிலை ஏற்பட்டது. இதற்காக வருத்தமுற்று இறைவனை வேண்டியபடி உறங்கு கின்றார். இந்நிலையில் வீழிமிழலைப் பெருமான் அவர்கள் கனவில் தோன்றி, 'நீங்கள் கால நிலைமையால் மனத்தில் வாட்டமடைந்துள்ளீர். ஆயினும் உங்களை வழிபடும் அடியார்களின் துயரினை நீக்கும் பொருட்டு இப்பஞ்சம் நீங்கும் அளவும் நாம் நாள்தோறும் இக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் ஒவ்வொரு பொற்காசு நுமக்குத் தருகின்றோம். பஞ்சம் நீங்கியபின் அக்காசு நுமக்குக் கிடைக்காது' என்றுகூறி மறைந்தார். பின் இறை வர் அளித்த அக்காசினைக்கொண்டு அடியார்களுக்குப் பசி யாற்ற முனைந்தனர். ஞானசம்பந்தரின் மடத்தில் தங்கி யிருந்த அடியார்களுக்கு அமுதளிக்கக் காலம் தாழ்ந்தது. இதற்குக் காரணம் கேட்ட பிள்ளையாரிடம் தாங்கள் இறை வன்பாற் பெற்ற காசு வட்டமில்லாத (மாசு குறைந்த) காரணத்தினால் வணிகர்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கின்றனர் என்றும், ஆனால் நாவுக்கரசரின் காசை ஏற்றுக் கொள் கின்றனர் என்றும் பணியாட்கள் கூறுகின்றனர். பிறகு சம்பந்தர் 'அப்பர் பெருமான் கைத்தொண்டு செய்தலால் அவர் பெறும் படிக்காசு வட்டமின்றி ஏற்றுக்கொள்ளப் பெறுகின்றது' என உணர்ந்து, 'இனிவரும் நாளில் வாசி தீரவே காசு நல்குவீர்' என இறைவனைப் பாடிப் போற்று வேன் என்று கூறி

> ''வாசி தீரவே, காசு நல்குவீர்
> மாசின் மிழலையீர், ஏசலில்லையே''[12]

-என்று குறையிறந்தார். இறைவன் திருவருளால் வாசி யில்லாத (குறைபாடில்லாத) காசு கிடைக்கப் பெற்றார். வணிகர்களும் இதனை ஏற்றுக்கொள்கின்றனர். இதற்குப்

பின் உரிய காலத்தில் அடியவர்களுக்குத் திருவமுது அளிக்கப்படுகின்றது.

## 2-16 மறைக்கதவம் அடைத்தல் :

ஆளுடைய பிள்ளையார் அப்பர் மற்றும் அடியார்களுடன் திருமறைக்காட்டை அடைந்தார். திருக்கோயிலைச் சுற்றிவந்துவாயிலை அடைந்தபோது திருக்காப்பிடப்பெற்ற திருக்கதவை மறைஓதும் அடியார்கள் ஒருவரும் திறக்காததால் பல காலமாய் அடைபட்டே இருப்பதைக் கண்டனர். இறை அன்பர்களும் வேறோர் பக்கம் வாயில் அமைத்து அவ்வழியே வழிபாடு செய்து வருவதையும் அடியார்கள் மூலம் அறிகின்றனர். உடனே சம்பந்தர் அப்பரை நோக்கிக்கதவு திறக்கும்படி பாடியருளுமாறு வேண்டுகிறார். அவரும் 'பண்ணினேர் மொழியாள்' என்று பாடுகிறார். இறுதியாக 'அரக்க னைவிர லால்' என்ற பாடலைப் பாடவும் கதவு திறந்துகொள்கிறது. அனைவரும் மகிழ்ந்து இறைவனைக் காண்பதற்காக உள்ளேசென்று மறைக்காட்டிறைவரை வழிபட்டு வெளியே வந்தபின் திருநாவுக்கரசர் ஆளுடைய பிள்ளையாரை நோக்கி 'இத்திருக்கதவும் இறைவனருளால் அடைக்கவும் திறக்கவும் அமையும்படித் தாங்கள் இப்போது பாடியருள வேண்டும்' என விண்ணப்பிக்க,

> ''சதுரம்மறை தான்றுதி செய்து வணங்கும்
> மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தர்
> இதுநன்கிறை வைத்தருள் செய்க எனக்குன்
> கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத் தாலே''13

-என்ற பாடலைப் பாடியவுடன் கதவு மூடிக்கொள்ளுகிறது. பின் பிள்ளையார் ஏனைய பாடல்களையும் பாடித் திருக்கடைக்காப்புச் சாத்திப் பதிகத்தை முடிக்கின்றார்.

## 2-17 மதுரை மாநகர் அற்புதங்கள் :

சம்பந்தப்பெருமான் காலத்தில் பாண்டிய நாட்டிலுள்ள ஆனைமலை, பசுமலை, நாகமலை ஆகிய இடங்களை இருப்பிடங்களாகக் கொண்டு சமணர்கள் தங்கள் சமயத்தை ஓம்பிவந்தனர். பாண்டிய மன்னனையும் மக்களையும் சைவ

சமயத்திலிருந்து சமண சமயத்தைப் போற்றும்படிச் செய்து விட்டனர். சோழர்குலப் பெண்மணி பாண்டிமாதேவி யராகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறை யாரும் தமக்குரிய சிவநெறியை நெகிழவிடாது கடைப் பிடித்து ஒழுகுகின்றனர். தீய சமணரை வெறுத்தனர். மன்னனை மீட்கவும் சைவம் தழைக்கவும் வழிகளைத்தேடி அமைந்திருந்தனர். இவ்விருவரும் சம்பந்தப் பெருமான் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருப்பதைக் கேள்வியுற்ற அளவில் பிள்ளையாரே தம் குறையைப் போக்கவல்லார் என்றுணர்ந்து அவரை அழைத்து வரும்படித் தமது பரிச னங்களைப்பணிக்கின்றனர். இவர்கள் சம்பந்தரைத்தரிசித்து சிவநெறியைப் பரப்பவும், திருநீற்றின் சிறப்பை மக்கள் உணரும்படிச் செய்யவும் கூடல் எழுந்தருளுமாறு பிள்ளையாரை வேண்டுகின்றனர்.

ஞானசம்பந்தர் அப்பர் பெருமானைச் சந்தித்துத் தாம் மதுரைசெல்ல வேண்டுமென்கிற முடிவைத் தெரிவிக்கிறார். சமண சமயத்தாரால் முன்னரே தாம் பட்டத்துன்பங்களை ஒருங்கெண்ணி, பிள்ளையாருக்கு ஏதேனும் தீங்கு நேர்ந் திடுமோ என்று அஞ்சினார். நாளும், ஞாயிறு முதலிய கோள்களும் நன்னிலையில் இல்லாதிருத்தலைக் காட்டிப் பாண்டிய நாட்டிற்குச் செல்லவேண்டாம் என்று அப்பர் தடுக்கிறார். எனினும் 'கோளும் நாளும் தீயவேனும் இறை வனடியார்களுக்கு நன்காம்' என்றுகூறி ஆலவாய்ப் பயணத் திற்குத் தயாராகின்றார். மதுரைமாநகரில் குலச்சிறையார் இவரை வரவேற்றுத் திருமடம் ஒன்றில் அடியார்களுடன் தங்கச்செய்து அவர்களுக்கு நல்விருந்தோம்பி மகிழ்ந்தனர்.

## 2-17-1 கண்டுமுட்டு — கேட்டுமுட்டு :

ஞானசம்பந்தர் திருமடத்தில் தங்கியிருக்கின்ற செய்தி நகர் முழுவதும் பரவுகின்றது. சமணர்கள் கலங்கினர். சிலர் ஞானசம்பந்தரைக் கண்டபின் அரசனைக் சந்தித்து, மதுரையில் சைவர்கள் கூட்டமாக வந்தமையால் அவர் களைக்காண நேரிட்டது; ஆகவே காணக்கூடாதவர்களைக்

காண நேரிட்டமையால் 'கண்டுமுட்டு' ஆயினோம்; உண்ணா நோன்பும் மேற்கொண்டோம் என்றார்கள். பாண்டியனும் நீங்கள் சொல்லக் கேட்டமையால் 'கேட்டு முட்டு' ஆயினேன் என்று கூறினான்.

## 2-17-2 பாண்டியன் வெப்பு நோய் அடைதல் :

ஞானசம்பந்தரின் வருகையைக் கேள்வியுற்ற மன்னனிடம் 'சமணர்களாகிய எங்களை வாதில் வெல்லும் நோக்கோடு அடியார்களோடு வந்துள்ளான்' என்று சமணர்கள் கூற மன்னன் 'இதற்கு நாம் என்ன செய்யலாம்?' என்றுதன் இயலாமையைக் கூறிப்போந்தான். அதற்குச் சமணர்கள், 'சம்பந்தன் தங்கியுள்ள மடத்திற்கு மந்திர விச்சையினால் தீப்பற்றும்படி செய்வோமானால் அவன் நகரை விட்டு ஓடிவிடுவான்' என்று கூறுகின்றனர். 'ஆவது இதுவேயாகில் அதனைச் செய்யப் போமின்' என்று மன்னனும் கூறிவிடுக்கிறான். மன்னனின் சொற்படிச் சமணர்கள் மடத்திற்குத் தீ வைக்கின்றனர். மடத்தின் ஒரு பகுதியானது தீப்பற்றி எரிவதைக்கண்டு அஞ்சிய சிவனடியார்கள் சம்பந்தரிடம் சென்றுமுறையிடுகின்றனர். சிவனடியார்கள் வாழும்மடத்து அமணர்கள் இட்ட தீத்தழல் பாண்டியனையே சென்று பற்றட்டும் என்ற கருத்துடன் இப்பாடலைப் பாடினார்.

> ''செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
> ஐய னேஅஞ்ச லென்றருள் செய்யெனைப்
> பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
> பைய வேசென்று பாண்டியற் காகவே'' 14

-என்றுகூற வெந்தழல் வெம்மை போய், மன்னனைப்பற்றி வெப்பு நோயாக உருக்கொண்டது. இவ்வெப்பு நோயைத் தணிக்கும் பல்வேறு மந்திரங்களைச் சொல்லிச் சமணர்கள் மயிற்பீலிகொண்டு தடவுகின்றனர்; குண்டிகை நீரைத் தெளிக்கின்றனர்; இருப்பினும், நோய் தீராது அதிகரிக்கின்றது. சமணர்கள் இழைத்த தீய செயலால்தான் தனக்கு

இந்நோய் வந்தது எனக்கருதி, மங்கையர்க்கரசியின் சொற்படி ஞானசம்பந்தரை அழைத்து வரும்படி மன்னன் ஏவல் செய்கிறான்.

சமணர்கள் காழிப் பிள்ளையார்க்கழைப்பு விடுத்தது குறித்துச் சினந்து, 'பிள்ளையாரை நோய் தீர்க்க இங்கு அழைத்தாலும் அவரும் தாங்களும் தீர்க்கும்படிச் சொல்ல வேண்டும். ஒருக்கால் அவரால் நோய் தீர்க்கப்பெற்றாலும் எங்களாலும் தீர்க்கப்பெற்றதாகச் சொல்லுக' என்கின்றனர். சமணர்களின் சூழ்ச்சியை உணர்ந்த அரசன் 'நீங்கள் இருதிறத்தாரும் உங்கள் தெய்வச் சார்பினாலே தீருங்கள். யான் நடுவுநிலை திறம்பி வஞ்சகம் பேசேன்' என்று கூறுகிறான். இந்நிலையில் ஞானசம்பந்தர் வருகைபுரிகிறார். பாண்டியன் பிள்ளையாரை நோக்கி, நீங்கள் என் வெப்பு நோயைத் தீருங்கள். தீர்த்தவர் எவரோ அவரே வாதில் வென்றவர்' என்று கூறுகிறான். ஆண் மக்களுக்கு இடப்பாக நோய் தீர்ப்பது என்பது எளிதான செயலாகையால் சமணர்கள், இடப்பாக நோயைத்தீர்க்க முன்வருகின்றனர். ஆனால் சுரநோய் அதிகரிக்கிறது. பின்னர் சம்பந்தர்,

> ''மந்திரமாவது நீறு; வானவர் மேலது நீறு,
> சுந்தரமாவது நீறு; துதிக்கப் படுவது நீறு,
> தந்திரமாவது நீறு; சமயத்தி லுள்ளது நீறு,
> செந்துவர் வாயுமை பங்கன்திருவால
> வாயான் திருநீறே'' 15

-என்று பாடி நீறு கொண்டு மெய் பூசி இருபக்க நோயையும் தீர்க்கின்றார். நோய் நீங்கப்பெற்ற அரசன் எழுந்து பிள்ளையாரை வணங்கி நிற்கின்றான்.

### 2-17-3 அனல் வாதம் :

பாண்டியனின் வெப்புநோயைத்தீர்க்கும் ஆற்றலில்லாச் சமணர் தருக்கவாதத்தால் வெல்ல இயலாதென்று கருதி, காட்சியளவில் அனல், புனல் வாதத்தில் சம்பந்தரைப் பங்குகொள்ளும்படிக் கூறுகின்றனர். 'இருதிறத்தாரும்

கண்ட பேருண்மையினை ஏட்டில் எழுதி அதை நெருப்பி லிட்டால், வேவுறாத ஏட்டின் சமயமே உண்மைச் சமயம்' என்று கூறுகின்றனர். இந்த ஏற்பாட்டிற்கும் சம்பந்தர் ஒப்புக்கொண்டார். பின்,

'போக மார்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாக மார்த்த பைங்கண் வெள்ளேற் றண்ணல் பரமேட்டி
ஆக மார்த்த தோலுடையன் கோவண ஆடையின்மேல்
நாக மார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே' 16

-என்ற பதிகத்தைப்பாடி அவ்வேட்டினைத் தீயிலிடுகின்றார். இவ்வேடு எரிந்து சாம்பலாகாமல் இருந்தது. ஆனால் சமணர்கள் இட்டது எரிந்து சாம்பலாகியது.

## 2-17-4 புனல் வாதம் :

அனல் வாதத்தில் தோல்வியுற்ற சமணர்கள் ஒரு வாதினை மும்முறை செய்து உண்மை காணலே முறையாகும் என்று புதுமையாகக் கூறிப்புனல் வாதத்திற்கு ஞானசம்பந்தரை இழுத்தனர். 'இருதிறத்தாரும் தத்தம் சமய உண்மைகளை எழுதிய ஏட்டினை ஆற்று வெள்ளத்தில் இட்டால் எவருடைய ஏடு எதிரேறிச் செல்கிறதோ அவ்வேட்டினை அனுப்பியவரே வென்றவராவார்' என்று கூறுகின்றனர். அப்போது குலச்சிறையார், தோற்றவர் களுக்கு வழங்கும் தண்டனை யாது?' என வினவ, சமணர்களே, 'தோற்றவர்கள் கழுவேற்றுதலுக்கு உரிய வர்கள்' என்று விடையிறுத்தனர்.

பாண்டியன் முன்னிலையில் 'அஸ்திநாஸ்தி' என்ற வடமொழித் தொடரை ஏட்டில் எழுதி வைகையில் இடுகின்றனர். இவ்வேடு வெள்ளத்தோடு கடலை நோக்கிச் செல்கிறது; ஞானசம்பந்தர்,

''வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே''17

-என்று தொடங்கும் பாடல்களை நீரிலிட அது வைகை வெள்ளத்தை எதிர்த்து ஓடுகின்றது. 'வேந்தனும் ஓங்குக' என்று பாடியதால் பாண்டியனின் கூன் நீங்கப்பெற்று 'நின்றசீர் நெடுமாறன்' என்ற பெயர் பெறுகின்றான். வெள்ளத்தில், சென்ற ஏடு வடகரையில் அமைந்துள்ள 'ஏடகத்தின் திருக்கோயிலில் வந்து நிற்கிறது. இதனைக் குலச்சிறையார் கொண்டு வந்து மன்னனிடம் காட்டு கின்றார். தோல்வி கண்ட சமணர்கள் கழுவேறினர்.

## 2-18 ஓடம் உய்த்தல் :

ஞானசம்பந்தர் திருக்கொள்ளம்பூதூரில் கோயில் கொண்டருளிய பெருமானைத் தொழவேண்டும் என்று ஆர்வத்தோடு செல்கிறார். அப்போது முள்ளியாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுகிறது. ஓடங்கள் கரையிலேயே கட்டப்பட்டுள்ளன. இதனைக் கட்டவிழ்த்து அடியார்களை ஏற்றித் தாமும் ஏறுகின்றார். அந்நிலையில்,

> ''கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்
> நட்ட மாடிய நம்பனை உள்கச்
> செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
> நல்கு மாறருள் நம்பனே''18

-என்ற திருப்பதிகத்தினைப் பாடிப்போற்றித் தமது நாவன்மையினையே கோலாகக் கொண்டு ஓடத்தைச் செலுத்துகின்றார். ஆற்று வெள்ளம் தணிந்துவிடப் பிள்ளையாரும் அடியார்களுடன் கொள்ளம்பூதூர்க் கோயிலை அடைகின்றார். ஆற்றில் ஓடம் செலுத்தும்படித் தமக்கு அருள்புரிந்த இறைவனை 'தலைவா! நாகப் பூணி வாய்! களிற்றுரிவை போர்த்த முக்கட் புனிதனே! என்று போற்றி மகிழ்ந்தார்.

## 2-19 புத்தரை வாதில் வென்றது :

ஞானசம்பந்தர் தன்னுடைய அடியார்களின் கூட்டத் தோடு திருத்தெளிச்சேரியை வழிபடுகின்றார். பின் அடி

யார்கள் மட்டும் 'போதிமங்கை' என்னும் பௌத்த மடத்திலருகே வரும்போது 'பரசமயக்கோளரி வந்தார்' என்று முழக்கமிட்டு ஆரவாரிக்கின்றனர். இதனைக் கேட்கப் பொறாதபுத்தர்கள் சமயக்கல்வியில் மேம்பட்ட 'புத்தநந்தி' என்பவனிடம் இதுபற்றிக் கூறுகின்றனர். இது கேட்ட புத்தநந்தி சினந்து சிவனடியார்களைச் சந்திக்கின்றான். சிவனடியார் வெற்றிக்கு அடையாளமான சின்னம் வைத்திருப்பதைக்கண்டு பொறாமல் 'நீங்கள் எங்களை வென்ற பின்னரே சின்னம் முதலியவற்றைப் பிடித்தல் வேண்டும்' என்று கூறித்தடுக்கின்றான். அடியார்கள் இதுபற்றி ஞானசம்பந்தரிடம் தெரிவிக்கின்றனர். இதனைக்கேட்ட சம்பந்தர், 'புத்தர்கள் வாதிற் பொருமிடத்து அறிவோம்' என்று அமைதியாகக் கூறுகின்றார். சிவனடியார் ஒருவர் (சம்பந்ரின் பதிகங்களை அவ்வப்போது எழுதிவரும் சம்பந்த சரணாலயர் என்பார்) பிள்ளையாரது திருவாக்காகிய,

''புத்தர் சமண்கழுக்கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்கள் தெளிந்துதேறின
வித்தக நீறணிவார் வினைப்பகைக்
கத்திர மாவன அஞ்செழுத்துமே''19

-என்ற பாடலைப்பாடி 'இடியிடித்து விழுதலாற் புத்தன் தலை உருண்டு வீழ்க' என வெகுண்டுரைத்தார். இச்சிவனடியார் கூறிய மந்திரவாக்கினால் தலை உடலிலிருந்து அறுபட்டு வீழ்கிறது. இதைக்கண்டு அஞ்சிய புத்தர்கள் 'சாரிபுத்தன்' என்பவனை அழைத்துவந்து பிள்ளையாரை அணுகி மந்திரவாதமின்றித் தருக்கவாதமே புரியவேண்டும் என்று கூறுகின்றனர். இத்தருக்கவாதத்தில் சாரிபுத்தன் தோல்வியுற அனைவரும் பிள்ளையாரின் காலில் வீழ்ந்து வணங்கிச் சைவர்களாகின்றனர்.

## 2-20 ஆண்பனையைப் பெண்பனையாக்குதல்:

சம்பந்தர் திருவோத்தூர் இறைவனை வழிபட்டு அவ்வூரில் தங்கியிருந்தார். அப்போது சிவனடியார் ஒருவர்

திருஞானசம்பந்தரை வணங்கிநின்று சிவத்தொண்டனான நான் சிவலடியார்களுக்கெனத் தண்ணீர் விட்டு வளர்த்த பனைகள் ஒன்றும் காய்த்திலது. இதனைக்கண்ட சமணர் கள், இப்பனைகளைச் சிவனருளால் காய்க்க வைக்க இயலுமோ? என வினவி இகழ்கின்றார்' என்று முறையிடு கின்றார். இதுகேட்ட ஞானசம்பந்தர்,

''பூந்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தாதாரில்லை யெண்ணுங்கால்
ஒத்தூர் மேய ஒளிமழுவாளங்கைக்
கூத்தீர் உம்ம குணங்களே'' 20

-என்ற பதிகத்தைப்பாடி முடிக்குமளவில் அங்கிருந்த ஆண் பனைகளெல்லாம் பெண்பனைகளாக மாறி குரும்பையீன்று காய்த்தன. இதனை நேரிற்கண்ட சமணர்கள் சிவநெறியை மேற்கொண்டு சம்பந்தரைப் போற்றுவராயினர்.

## 2-21 எலும்பைப் பெண்ணாக்குதல் :

மயிலாப்பூரில் வணிகர்குலத்தில் தோன்றிய 'சிவநேசர்' என்பவர் சைவநெறியில் மிகுந்த பற்றுடையவராவார். இவர் ஞானசம்பந்தரின் பெருமையினை அடியார் பலர் சொல்லக்கேட்டு அவர்மேல் தீராத அன்பு கொண்டவ ரானார். இவர் தன் மகள் பூம்பாவையைச் சம்பந்தருக் கென்றே உடைமையாக வளர்த்து வருகின்றார். இங்ஙனம் சம்பந்தருக்கு உரியவளெனச் சொல்லப்பெற்ற பூம்பாவை மலர் கொய்யச் சென்றபோது அங்குப் பாம்பு தீண்ட இறந் தாள். ஞானசம்பந்தருக்கு உரியவள் என்று கூறினமையால் இனித் துன்பமுற வேண்டியதில்லை என்றெண்ணி அவளது ஈமச்சாம்பலையும் எலும்பினையும் ஒரு குடத்திலிட்டுப் பாதுகாக்கின்றார். பின்னாளில் ஞானசம்பந்தரிடம் இது பற்றிக்கூறச் சம்பந்தர், பூம்பாவையை உயிர்பெற்று எழுப்புதற்கு,

'மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்கிட்ட பண்பின் உருத்திர பலிகணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்'' 21

-என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடுகின்றார். இப் பதிகப் பாடல்கள் முடிந்தவுடன் அவ்வெலும்பனைத்தும் ஒருருவாய் வடிவுபெற்று அழகிய மங்கையாக மாறுகின்றது. சிவநேசர் இவளை மணந்துகொள்ளும்படிக்கூற, 'தன்னால் உயிர்பெற்றமையால் இவள் என் மகளாவாள்' என்று நயமாக மறுத்தார். இறைவனது திருவருளால் பிறந்த இம்மங்கையும் சிவனருளைச் சிந்தித்தபடி வாழ்ந்து இறைவனடி சேர்கின்றாள்.

## 2-22 நல்லூர்ப் பெருமணம் :

ஞானசம்பந்தர் பல தலங்களுக்கும் சென்று மீண்டும் சீகாழியை வந்தடைகின்றார். சிவபாத இருதயரும் மற்றும் பலரும் திருமணம் செய்துகொள்ளுமாறு கூறுகின்றனர். மறுத்த ஞானசம்பந்தரிடம் அந்தணருக்குரிய அறுதொழில் இயற்றத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்றுரைக்கப்பின்னர் இதற்கு இசைவு தெரிவிக்கின்றார். இதன்படி, நல்லூரில் 'நம்பியாண்டார் நம்பி'யின் மகளை ஞானசம்பந்தருக்கு மணம் முடிக்கமுடிவு செய்கின்றனர். திருமண நாளன்று 'பெருமணம்' என்ற திருக்கோயிலில் வீற்றிருந்த இறைவனை வணங்கித் திருமணக் கோலம் கொள்கிறார். திருநீலநக்கநாயனார் வேதவிதிப்படி திருமணச்சடங்குகளை நடத்தி வைக்கிறார். மந்திர முறையால் வளர்க்கப்பெற்ற எரியினை வலம் வருங்கால், 'இருவினைக்கு வித்தாகிய இல்லொழுக்கம் வந்து என்னைச் சூழ்ந்துகொண்டதே இனி, இவளுடன் சிவன்தாளைஅடைவேன்' என்று உறுதிகொள்ளுகிறார். தமது திருமணத்தைக் கண்டோரது பிறவிப் பாசத்தை நீக்குதலையே பொருளாகக் கொண்டு,

> ''கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
> பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
> சொல்லூர்ப் பெருமணம் சூடலரே தொண்டர்
> நல்லூர்ப் பெருமணம் மேய நம்பானே'' 22

-என்று பாட, தூய பெருஞ்சோதியாகத் இறைவன் பிள்ளையாரை நோக்கி 'ஞானசம்பந்தனே நீயும் பூவையன்னாள்

ஆகிய நின் துணைவியும் இங்கு நின் புண்ணிய மணத்தைக் காணவந்தார் யாவரும் இந்தச்சோதியினுள் வந்துசேர்மின்' என்று பணிக்கின்றார். ஞானசம்பந்தரும்,

''காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே''23

-என்று பாடத் திருநீலநக்க நாயனார், முருக நாயனார், சிவபாத இருதயர், நம்பாண்டார் நம்பி, திருநீலகண்ட யாழ்ப்பாணர் முதலானோரும், அடியார்கள், முனிவர்கள், முத்துச்சிவிகை சுமந்தவர்களும் இறைவன் காட்டிய பெருஞ் சோதியில் கலந்தனர். அனைவரும் கலந்தபின் கோயில் சோதி நிலையிலன்றி முன்னையநிலையினை அடைகின்றது.

## 2-23 முடிவுரை :

ஞானசம்பந்தரின் வரலாற்றை அறியப்பெரிதும் துணை புரிவது சேக்கிழாரின் 'பெரியபுராணமே' ஆகும். இந் நூலே சம்பந்தர் பிறந்தது முதல் அடியார்களோடு சோதி யில் கலந்தது வரையிலான வரலாற்றை மிக விளக்கமாகக் குறிப்பிட்டுள்ளது.

ஞானசம்பந்தர் வரலாற்றில் 'பெயர்' முக்கிய இடம் வகிக்கின்றது. பெரியபுராணத்தில் அதாவது ஞானசம்பந் தர் புராணத்தின் முற்சகுதியில் 'பிள்ளையார்' என்றும் ஞானம் பெற்றபின் 'ஞானசம்பந்தன்' என்றும் சம்பந்தர் அழைக்கப்படுகின்றார். ஆனால் தொட்டிலமர்வித்த செய் தியினைக் குறிப்பிடும் சேக்கிழார் ஞானசம்பந்தருக்குப் பெற்றோர் இட்டபெயர் என்ன என்பது பற்றி யாதோர் இடத்திலும் குறிப்பிடவில்லை.

சம்பந்தர் வரலாற்றில் மாறுபட்ள செய்திகளும் காணப் படுகின்றன. 'நம்பியாண்டார் நம்பிகள்' வியந்துபோற்றும் 'பாலையை நெய்தலாக்கிய'ச் செய்தியினைச் சாத்திர நூலான நிருக்களிற்றுப்படியாரும் ஏற்றுக்கொண்டுள்ளது. ஆனால் சேக்கிழார் இதுபற்றி எங்கும் குறிப்பிடவில்லை.

மேலும், ஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றை நோக்கும்போது, திருநீலகண்ட யாழ்ப்பாணரும், இவர் மனைவியாரான மதங்க சூளாமணியும் பிள்ளையாரின் பாடலுக்கு இசைகூட்டிச் சிறப்படையச் செய்திருக்கின்றனர். அவ்வப்போது ஞானசம்பந்தர் பாடும் பாடல்களை, இவருடன் சமயத்தொண்டு புரிந்துவந்த 'சம்பந்த சரணாலயர்' என்பார் எழுதி வந்துள்ளார் என்பது வரலாற்றின் வாயிலாகப் புலப்படுகிறது. சம்பந்தரின் அற்புதங்கள் பல பலர் முன்னிலையில் நடந்தேறியதால் சமணர் பலர் சைவர்களாக மாறிய செய்தியும் தெரியவருகிறது.

ஞானசம்பந்தரைச் சமுதாயத் தொண்டராகப் பல இடங்களில் நோக்க முடிகின்றது. 'வாசு தீரவே காசு நல்குவீர்' என்று பாடிப்பெற்ற பரிசிலை மக்களுக்காகவே அளித்திருக்கின்றார். இருபொழுதும் மக்களைத் திரளாக அழைத்துச் சோறளித்துப் பசிக் கொடுமையினின்றும் காப்பாற்றியிருக்கின்றார். திருச்செங்கோட்டில் கடுங்குளிர் சுரத்தால் நலிந்துமடிகின்ற மக்களைக் காப்பதற்கும் பாடல் பாடி, சுரம்நீக்கிய மருத்துவராகவும் விளங்கியிருக்கின்றார்.

திருப்பாச்சிலாச்சிரமம் என்னும்தலத்தில் கொல்லிமலை அரசன்மகளின் 'முயலகன்' என்னும் ஒருவகை நோயையும் நீக்கியுள்ளார் என்பதும், திருமருகலில் ஒரு பெண்ணின் பொருட்டு மனமிரங்கிப் பாம்பு கடித்து இறந்த அவள் காதலனை எழுப்பித்தந்து இருவருக்கும் மணம் புரிவித்தது போன்ற செயல்களும் சம்பந்தரைச் சமுதாயத் தொண்டர் என்ற நிலைக்கு உயர்த்தியிருக்கின்றன. வெறும் சமயத் தலைவராக மட்டும் இருந்திருப்பின் ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்றுக்கவிமட்டுமே பாடியிருப்பார். ஆனால் சம்பந்தர் மாறாகச் சமுதாயத்தில் பெரும் எழுச்சியையும், பல் மாறுதல்களையும், மறுமலர்ச்சிகளையும் முறையாகச் செய்திருக்கிறார் என்பதை வரலாற்றின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

## குறிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | தேவாரம்,<br>பண்முறை-பகுதி-1, | 1:23:1 |
| 2. | மேலது., | 2:220:1 |
| 3. | மேலது., | 2:226:1 |
| 4. | மேலது., | 3:280:1 |
| 5. | மேலது., | 3:280:2 |
| 6. | மேலது., | 1:44:1 |
| 7. | மேலது., | 1:116:1 |
| 8. | மேலது., | 3:331:1 |
| 9. | மேலது., | 3:262:1 |
| 10. | மேலது., | 1:136:1 |
| 11. | மேலது., | 2:154:1 |
| 12. | மேலது., | 1:92:1 |
| 13. | மேலது., | 2:173:1 |
| 14. | மேலது., | 3.309:1 |
| 15. | மேலது., | 2:202:1 |
| 16. | மேலது., | 1:49:1 |
| 17. | மேலது., | 3:312:1 |
| 18. | மேலது., | 3:264:1 |
| 19. | மேலது., | 3:280:10 |
| 20. | மேலது., | 1:54:1 |
| 21. | மேலது., | 2:183:1 |
| 22. | மேலது., | 3:383:1 |



காழிக் கவுணியர்கோன் கௌரிமுலைப் பாலருந்தி
வாழுநித்தி லச்சிவிகை வண்பந்தர் - ஏழிசைக்காம்
தாளம் கிழிகாசு தான்கொடும றைக்கதவின்
தாளடைந்தார் சம்பந்தர் தான்.

- திருத்தொண்டர் சதகம்

# சம்பந்தரின் அருட்செயலுக்குரிய அகப்புறச் சான்றுகள்

## 3-0 முன்னுரை :

சைவ சமயக்குரவர் நால்வருள் ஒருவரான ஞான சம்பந்தர் தம்முடைய வாழ்க்கையில் பல்வேறு அருட்செயல் களைச் செய்துள்ளார். அவற்றுள் பெரும்பாலானவற்றுக்கு அகப்புறச் சான்றுகள் கிடைத்துள்ளன. தேவாரத்தின் வாயிலாக அகச்சான்றுகளும், திருத்தொண்டத்தொகை, பதினோராம் திருமுறை, பெரியபுராணம் ஆகியவற்றின் வாயிலாகப் புறச்சான்றுகளும் இங்குச் சுருக்கமாக எடுத்து ரைக்கப்படுகின்றன.

சுந்தரர் அடியார்களைப் பற்றிய குறிப்பினைத் தன்னுடைய திருதொண்டர் தொகையில் தந்திருக்கின் றார். கி.பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவரெனக்கருதப் படும் நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரின் வரலாற்றைச்

சற்றுவிளக்கமாகக் கூறவிரும்பியதால் ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பைவிருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி போன்ற ஆறுவகையான படைப்புகள், பதினோராம் திருமுறையில் காட்டப்பட்டுள்ளன. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சேக்கிழார் சம்பந்தரின் பிறப்பு முதல் சோதியில் கலந்தது வரையிலான செய்திகளை நிரல்படுத்தி ஒரு முழு வரலாற்றைத் தம் பெரியபுராணத்தில் படைத்துள்ளார்.

பக்தி இலக்கிய உலகில் இம்மூவரின் படைப்புகள் மட்டுமே ஞானசம்பந்தரின் வரலாற்றையும் அருட்செயல்களையும் விரிவாக விளக்கி இருப்பதால், ஒவ்வொரு அருட்செயலுக்குரிய புறச்சான்றுகளும் இந்நூல்களின்வாயிலாகவே மேற்கோள்களில் கையாளப்பட்டுள்ளன.

## 3-1 சம்பந்தரும் அருட்செயல்களும் :

சம்பந்தரின் அற்புதச் செயல்களைத் தம் 'திருமுறை கண்டபுராணத்தில்' உபாபதி சிவாச்சாரியர் பட்டியலிட்டுக் காட்டியுள்ளார்.

> ''காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
> கவுணியர்கோன் அமுதுமையாள் கருதி யூட்டும்
> ஏழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
> இலங்கியநித் திலச்சிவிகை யிசைய ஏறி
> வாழுமுய லகன் அகற்றிப் பந்த ரேய்ந்து
> வளர்கிழிபெற்று அரவின்விட மருகல் தீர்த்து
> வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
> மீனவன்மே னியின்வெப்பு விடுத் தாரே''[1]

என்றும்,

"ஆரெரியிட்டு எடுத்தவே டனைமுன் னேற்றி
ஆற்றலிடும் ஏடெதிர்போ யணைய வேற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓட மேற்றிக்
காருதவும் இடிபுத்தன் றலையில் ஏற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
ஈரமிலா அங்கமுயி ரெய்த வேற்றி
இலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே"2

என்றும் சம்பந்தரின் வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டி யுள்ளார். இவர்தம் அரிய செயல்களுக்கு அகச்சான்று களும், புறச்சான்றுகளும் இருப்பதால் அவற்றை விரித்துரைக்க முற்படுவோம்.

## 3-2 அருட்செயல்களின் நிலைகள் :

சீகாழியில் ஞானசம்பந்தர் ஞானப்பால் அருந்தியது முதல் நல்லூர்பெருமணச் சோதியில்கலந்ததுவரை பல்வேறு அருட்செயல்களைப் புரிந்துள்ளார். இந்நிகழ்வுகளைப் பொதுவாக மூன்றாகப் பாகுபடுத்தலாம். அவை,

1) இறைவன் ஞானசம்பந்தருக்கு உதவியது
2) இறைவனிடம் சம்பந்தர் வேண்டிப்பெற்றது
3) வியக்கத்தக்க அருட்செயல் என்பன.

### 3-2-1 இறைவன் ஞானசம்பந்தருக்கு உதவி செய்தல் :

ஞானசம்பந்தரின் வரலாற்றை நோக்கும்போது நான்கு இடங்களில் இறைவன் அவருக்கு உதவியிருப்பது தெரியவருகிறது. முதலாவது, சீகாழியில் தந்தையைக் காணாமல் அழுத பிள்ளைக்குத் திருமுலைப்பால் அளித்தது.

இரண்டாவதாக, திருக்கோலக்காவில் தாளம் போட்ட சிறுகைநோகுமென எண்ணிப் பொற்றாளம் கொடுத்தல்.

மூன்றாவதாக, திருநெல்வாயில் அரத்துறையில் இறைவனைக்காண நடந்தேவரும் பிள்ளையாருக்கு முத்துச் சிவிகை, குடை, சின்னம் ஆகியவற்றை அளித்து அருளுதல்.

நான்காவதாக, பட்டீசுவரத்தில் வழிபட வந்த சம்பந்தருக்குக் கடும் வெயில் தாங்காது என்பதற்காகச் சிவகணங்களின்மூலம் முத்துப்பந்தர் கொடுத்தல் ஆகியவை யாம். ஒவ்வொன்றையும் அகச்சான்றுகளுடன் காண்போம்.

### 3-2-1-1 ஞானப்பால் கொடுத்தல் :

சீகாழித் திருநகரிலே ஞானசம்பந்தர் உமையம்மை யிடம் ஞானப்பால் உண்டு சிவஞானம் பெற்ற குழந்தை யாகிறார். இந்நிகழ்ச்சியை உறுதிபடுத்திக்கூற முதல்நிலை ஆதாரமாகத் திகழ்வது சம்பந்தரின் பாடல்களே ஆகும். தனது இளம்பருவத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பின்னொரு காலத்தில் நினைந்துபோற்றும் நிலையில் அருளியபாடல்,

'போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல்லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே' [3]

என்பதுவாம். இப்பாடலின்வழி இளம்பருவத்தில் பொற் கிண்ணத்திலே பாலை உண்டதற்காக அதுபொல்லாதென்று தந்தை வெகுளும்படி என்னை ஆட்கொண்டருளிய பிரம்ம புரத்திறைவன் என்று சம்பந்தரே உமையம்மை தனக்கு அருளிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

'சிற்றிடை யரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரும்
நற்றிற முறுகழு மலநகர் ஞானசம்பந்தன்' [4]

என்று சம்பந்தரே கூறுவதன் வாயிலாகவும் ஞானப்பால் உண்ட செய்தி உறுதிப்படுத்தப்படுகின்றது.

சம்பந்தர் பாலுண்ட செய்தியினைச் சுந்தரர், நம்பி யாண்டார் நம்பிகள், சேக்கிழார் முதலானோரும் குறிப்

யிட்டுள்ளனர். நம்பி ஆரூரர் தனது திருநனிப்பள்ளிப் பதிகத்தில்,

'ஊனமில் காழிதன்னுள் உயர் ஞானசம் பந்தர்க்கன்று
ஞானம் அருள்புரிந்தான் நண்ணுமூர் நனிபள்ளியதே'5

-என்று சம்பந்தர் 'ஞானம்' பெற்ற செய்தியினைக் குறிப்பிட்டுள்ளார். நம்பியாண்டார் நம்பிகள் தனது ஆறுவகையான படைப்புகளிலும் ஞானசம்பந்தரின் வரலாற்றையே உரைத்துள்ளார். 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்' எனும் படைப்பில்,

''நற்கண்ணி அளவிறந்த
ஞானத்தை அமிர்தாக்கிப்
பொற்கிண்ணத் தருள்புரிந்த
போனகமுன் நுகர்ந்தனையே'' என்றும்

'அந்திச்செம் மேனியனை
அடையாளம் பலசொல்லி
உந்தைக்குக் காணஅரன்
உவனாமென் றுரைத்தனையே'6 என்றும்

சம்பந்தர் பால்அருந்திய செய்தியும், தந்தைக்கு இறைவனின் திருவுருவ அடையாளங்களைப் பற்றிக் குறிப்பிட்ட செய்தியும் எடுத்தியம்பப்பட்டுள்ளன. 'அகமர்ஷண' மந்திரம் ஓதிமுடித்த சிவபாத இருதயர் அங்குப் பாலுண்ட வாயுடன் தோன்றும் ஞானசம்பந்தரைக்கண்டு 'யாரளித்த பாலடிசில் உண்டது நீ என வெகுளா' என்று கேட்டதாகச் சேக்கிழார் குறிப்பிட்டுச் செல்கிறார்.

### 3-2-1-2 பொற்றாளம் அளித்தல் :

திருக்கோலக்காவில் இறைவனைக்கண்டு புகழ்ந்து பாடும் ஞானசம்பந்தரின் கைகளில் இறைவனருளால் தாளம் வந்து பொருந்தியது என்பது வரலாறு. இவ்வற்புதச் செயலுக்கு ஆதாரமாகச் சம்பந்தரின் பாடல்வரிகள் எங்கணும் காணப்பெறவில்லை. எனவே, அகச்சான்களை விடுத்துப் புறச்சான்றுகளே இங்குக் கொள்ளப்படுகின்றன.

ஞானசம்பந்தரின் காலத்துக்குப் பிற்பட்டவரான சுந்தரர் தமது பாடலில்,

> ''நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்
> ஞானசம்பந்தனுக்கு உலகவர் முன்
> தாளம் ஈந்துஅவன் பாடலுக்கிரங்குந்
> தன்மை யாளனை''7

-என்று கூறுவதிலிருந்து திருக்கோலக்காவில் மக்கள் பலர் காணும் வண்ணம் தாளம் கொடுத்த செய்தி புலப்படுகிறது. ஞானசம்பந்தருக்கென்றே பதினோராம் திருமுறையில் பல பாமாலைகளைத் தொடுத்த நம்பியாண்டார் நம்பிகள், ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்,

> ''..................................சண்பையர்
> கோன் பாணி நொந்திடுமென்
> றெண்ணா எழுத்தஞ்சும் இட்டபொன்
> தாளங்கள் ஈயக் கண்டும்
> மண்ணார் சிலர்சண்பை நாதனை
> ஏத்தார் வருந் துவதே''8

-என்றுபாடி ஐந்தெழுத்துப் பொறித்த தாளம்பெற்ற வரலாற்றை எடுத்துரைக்கிறார். மேலும் ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவையில், இறைவனால் கொடுக்கப் பட்ட தாளம் செம்பொன்னால் ஆகியது என்றுங் குறிப்பிட்டுள்ளார். பெரியபுராணத்தை நோக்கும்போது,

> ''கையதனால் ஒத்தறுத்துப் பாடுதலுங்
> கண்டருளிக் கருணை கூர்ந்த
> செய்யசடை வானவர்தம் அஞ்செழுத்தும்
> எழுதிய சொம்பொற் றாளங்கள்
> ஐயரவர் திருவருளால் எடுத்தபா
> டலுக்கிசைந்த அள வால்ஒத்த
> வையமெலாம் உய்யவரு மறைச்சிறுவர்
> கைத்தலத் துவந்த வன்றே''9

பொற்கிழி ஒன்றைப் பெற்றுத்தருகிறார். மேலும் அடியார் உணவின்றி வருந்திய காலத்துப்பசிப்பிணி நீங்க இறைவனை வேண்டிப்படிக்காசு பெறுகிறார். சம்பந்தரின் வாழ்க்கையில் அவர் இவ்விருஇடங்களில் மட்டுமே இறைவனிடம்வேண்டிப் பொருள் பெறுகின்றார்.

### 3-2-2-1 உலவாக்கிழி பெறுதல் :

ஞானசம்பந்தர் சிவபாத இருதயரின் வேள்விக்காகப் பொருள் வேண்டி நிற்க எடுக்கவெடுக்கக் குறையாத பொற்கிழி ஒன்றைப் பூதம் ஒன்று தோன்றிக் கொடுத்ததாக வரலாறு. திருவாவடுதுறையில் சம்பந்தர் பாடிய பாடல்கள் 'நாலடிமேல்வைப்பு' என்ற முறையில் அமைந்துள்ளன. ஈற்றில் உள்ள இரு அடிகள்,

'இதுவோ எமைஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ வுனதின்னருள் ஆவடுதுறை அரனே' 14

-என்று குறிப்பிடுவதிலிருந்தும், திருக்கடைக்காப்பில்,

'நலமிகு ஞானசம்பந்தன் சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்' 15

-என்று குறிப்பிடுவதிலிருந்தும் இப்பதிகம் பொன்வேண்டி பாடப்பட்டதாகக் கொள்ளலாம். சம்பந்தரின் 'விலை' என்ற சொல் 'பொன்'னைக் குறிப்பதாகும் என்ற நிலையில் பன்னிரு திருமுறை வரலாறு இதனை அகச்சான்றாகக் கொள்கிறது. 16

### பிற சான்றுகள் :

ஞானசம்பந்தருக்கு உலவாக்கிழி அளித்த அற்புத நிகழ்ச்சியை அவர் காலத்தைச் சார்ந்த நாவுக்கரசர்,

'மாயிரு ஞானமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கு அம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறைய னாரே' 17

-என்று தமது பாடல் ஒன்றில் குறிப்பிட்டுள்ளார். சம்பந்தரின் சம காலத்தவரான நாவுக்கரசரின் இக்கருத்து இந்நிகழ்ச்சியை உண்மை எனக்கொள்வதற்குப் பெரிதும் துணை செய்கிறது. மேலும், நாவுக்கரசரின் திருப்பாடல் மட்டுமே முதன்முதலாக 'பொன்ஆயிரம்' என்ற கருத்தைத் தெரிவிக்கிறது. இச்செய்தியைத் தமது திருமும்மணிக் கோவையில்,

'ஆவடுதுறையிற் பொன்னாயிரமே கண்டது'18

-என்றும், திருவுலாமாலையில்

''ஆயிரஞ் செம்பொன்அது கொண்டும்''19

-என்றும் நம்பியாண்டார்நம்பிகள் குறிப்பிட்டுள்ளார். இவர் சம்பந்தரைப் பற்றிய தம் படைப்புகளில் இதனைத் தொலையாநிதியம், ஆயிரம் செம்பொன், பொன்ஆயிரம், செம்பொற்கிழி போன்ற சொற்களால் குறிப்பிட்டுள்ளார். பூதம் ஒன்று தோன்றி ஆயிரம் பொன் அடங்கிய பொற்கிழி ஒன்றை வைத்த செய்தியைச் சேக்கிழார்,

''.............. பூதமுன் விரைந்த கல் பீடத்
துச்சி வைத்தது பசும்பொன்ஆ யிரக்கிழி ஒன்று''20

-என்று கூறியுள்ளார்.

## 3-2-2-2 படிக்காசு பெறுதல் :

திருவீழி மிழலையில் சம்பந்தர், அப்பர் மற்றும் அடியார்கள் தங்கியிருந்தபோது கடுமையான பஞ்சம். இதனை நீக்கும் பொருட்டு இறைவனிடம் வேண்டிப் பெற்றதே 'படிக்காசு' ஆகும். ஞானசம்பந்தரின்,

''வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏச லில்லையே''21

போன்ற அடிகளில் இறைவனிடம் வாசியில்லாத காசுபெற்ற செய்தியும் புலப்படும். சம்பந்தரின் காலத்தைச் சேர்ந்த நாவுக்கரசரும் இச்செய்தியை,

''பாடிப்பெற்ற பரிசில் பழங்காசு
வாடவாட்டந் தவிர்ப்பார் அவரைப்போல்''22

என்று கூறியிருப்பதிலிருந்து சம்பந்தர் பெற்ற காசு இறைவனால் பரிசிலாக அளிக்கப்பட்டமையே என்பது நன்கு உறுதிப்படுத்தப்படுகின்றது.

**பிற சான்றுகள் :**

சம்பந்தர் படிக்காசு பெற்ற நிகழ்ச்சியைச் சுந்தரர் 'தமிழோடு இசைகேட்கும் இசையாற்காசு நித்தல் நல்கினிர் அருந்தண் வீழிகொண்டீர் அடியேற்கும் அருளுதிரே'[23] -என்று குறிப்பிட்டுள்ளார். நம்பியாண்டார் நம்பிகள்,

''துங்கப் புரிசை தொகுமிழலை அங்கதனில்
நித்தன் செழுங்காசு கொண்டு''[24]

-என்று ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலையிலும்,

''ஈசன் திருவரு ளால்எழில்
வீழி மிழலையின் வாய்க்
காசின் மழைபொழிந் தானென்றிஞ்
ஞாலம் கவின் பெறவே''[25]

-என்று ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியிலும் ஈசன் அருளால் காசுபெற்ற செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார் இந்நிகழ்ச்சியைப் பல பாடல்களின் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். குறிப்பாக,

''மற்றைநாள் தம்பிரான் கோயில்புக்கி வாசிதீர்த்
தருளும், எனப்பதிகம்பாடிப் பெற்றபடி நற்காசு
கொண்டு மாந்தர் பெயர்ந்துபோல் ஆவணவீ தியிலிற்
காட்ட, 'நற்றவத்தீர்! இக்காசு சால நன்று
வேண்டுவன நாந்தருவோம்' என்று நல்க,
அற்றைநாள் தொடங்கிநாட் கூறு தன்னில்
அடியவரை அமுது செய்வித் தார்வம் மிக்கார்''[26]

என்ற பாடலை ஒரு சான்றாகக் கொள்ளலாம்.

## 3-2-3 வியக்கத்தக்க அருட்செயல்கள் :

சம்பந்தர் தாம் வாழ்ந்த பதினாறு ஆண்டுகளுக்குள் பல்வேறு அருட்செயல்களைச் செய்துள்ளார். சைவ

சமயத்தைப் பரப்புவதையே நோக்கமெனக் கொண்ட இவர் பலதலங்களுக்குச் செல்லும்போது அங்குவாழ்மக்கள் பலரின் இன்னல்களைத் தீர்த்தருளியிருக்கிறார். ஞானசம்பந்தரிடம் தங்களது இன்னல்களைத் தீர்த்துக்கொண்ட அனைவரும் ஏதேனும் ஒரு விதத்தில் சைவ அடியார்களாகவோ அல்லது சிவவழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்களோ இருந்திருக்கின்றனர். எனவே, சிவநெறியைப் பின்பற்றுபவர்களுக்குத் துன்பம் தீர்க்கப்படுதல் எளிது என்பது இவ்வருட்செயல்களின் மூலம் தெரிய வருகிறது.

## 3-2-3-1 முயலகன் நோய் தீர்த்தல் :

திருப்பாச்சிலாச்சிரமத்தில் கொல்லி மழவன் என்ற சிற்றரசனின் மகள் முயலகன் என்ற நோயினால் வருந்த இதனை ஞானசம்பந்தர் தீர்த்தார். இதனை,

''மணிவளர் கண்டரோ மங்கையை வாட
மயல்செய்வதோ விவர்மாண்பே''27

''செஞ்சுடர் வண்ணரோ பைந்தொடிவாடச்
சிதைசெய்வதோ விவர்சீரே''28

''பூணெடுமார்பரோ பூங்கொடி வாடப்
புனைசெய்வதோ விவர்பொற்பே''29

என்றெல்லாம் கூறுவதோடு 'தையலை வாட', 'தாழ் குழல் வாட' என்றெல்லாம் குறிப்பிடுவதிலிருந்து முயலகன்நோய் தீர்க்க ஞானசம்பந்தர் முயன்றமை புலனாகும்.

### பிற சான்றுகள் :

நம்பியாண்டார் நம்பிகள் தனது ஆளுடைய பிள்ளையார் திருத்தொகையில்,

''மழவன் சிறுமதலை வான்பெருநோய் தீர்த்த''30

என்று கொல்லி மழவனின் மகள் உற்ற நோய் பற்றிய செய்தியைக் கூறுகின்றார். சேக்கிழாரும்,

''மணிவளர் கண்டரோ மங்கையைவாட
மயல்செய்வ தோஇவர் மாண்ப'தென்று
தணிவில் பிணிதவிர்க்கும் பதிகத் தண்டமிழ்
பாடினார் சண்பை நாதர்''31

-என்று குறிப்பிட்டுள்ளார்.

முயலகன் நோய் பற்றிக் குறிப்பிடும்போது 'நோயின் பிடிப்பினால் துன்பத்தை அனுபவிக்க முடிகிறதேயன்றி, நோயினைப்பற்றி அறியவோ, அதன் தன்மையை வெல்லும் வகையை நாடவோ, செயற்படுத்தவோ இயலவில்லை. நோயானது ஆளுந்தன்மை பெற்று ஆளும் உரிமையுடைய உயிரை அடக்கிவிட்டது. எனவே நோய் முயலகன் என்ற ஆளும் தன்மையுடையதாகக் காட்டப்பெற்றது. உயிர் அடங்கிய நிலையில் பெண்மையாக அமைத்துக் காட்டப் பெற்றது' என்று உள்ளுறை வைத்துக் குறிப்பிடுகிறது. திரு ஞானசம்பந்தரைப் பற்றிய ஓர் ஆய்வுநூல்.32

### 3-2-3-2 பாலையை நெய்தலாக்குதல் :

ஞானசம்பந்தர் 'திருநனிப்பள்ளி' எனும் பாலை நிலப்பதியை, 'காரைகள் கூகை' எனத்தொடங்கும் பதிகத்தால் நெய்தல் நிலமாக மாற்றினார் என்று வரலாறு கூறும். இத்திருப்பதிகத்தின் பாடல்கள் அனைத்திலும் முதலிரண் டடிகளில் பாலை நிலத்தியல்புகளும், பின்னிரண்டடிகளில் நெய்தல் நிலத்தியல்புகளும் கூறப்பட்டுள்ளனவே தவிரச் சம்பந்தரின் அருட்செயலால் இவ்வாறு மாற்றம் பெற்றன என்று கருதுவதற்கு இடமில்லை.

### பிறச் சான்றுகள் :

பாலையை நெய்தலாக்கிய திறம் பற்றி நம்பி யாண்டார் நம்பிகள் மிகவும் பாராட்டிப் பேசியுள்ளார். சான்றாக, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதியில்,

''நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானக மாக்கியஃதே
போதின் மலிவயல் ஆக்கிய கோன்அமர் பொற்புகலி'33

-என்ற பாடியுள்ளார். மேலும் 'பாலையும் நெய்தலும் பாடவலான்' என்றும் குறிப்பிட்டுள்ளார்.

நம்பியாண்டாருக்குப் பின்வந்த சேக்கிழார் இதனை மறுக்கும் நோக்கோடு இச்செய்தியைப் பற்றிக் குறிப்பிட வில்லை. காரணம், பாலையை நெய்தலாக்கி இருப்பா ரெனில் சம்பந்தரே இந்த அற்புதத்தைப் பற்றித் தம்பாடல் களின் வாயிலாகக் குறிப்பிட்டிருப்பார். குறிப்பிடாத காரணத்தினால் சேக்கிழாருக்கு இக்கருத்தில் உடன்பாடு இல்லையோ என ஐயுற வேண்டியுள்ளது.

மேலும், 'பள்ளி' என்ற இடம் சமணர்களுக்குரிய இடமாதலால் சைவம்தழைக்கத் தொண்டாற்றிய சம்பந்தர் எப்படிச் சமணர்கள் வாழும் பகுதியைச் செழிப்புறச் செய் திருப்பார் என்ற வினாவையும் ஆராய்ச்சியாளர்கள் எழுப்பியுள்ளனர்.

### 3-2-3-3 உபநயனத்தில் மந்திர விளக்கம் :

ஞானசம்பந்தருக்கு ஏழாவதாண்டில் உபநயனச் சடங்கு நடைபெற்றது. அப்போது மந்திரங்களுக்கெல்லாம் மூலமந்திரமாகத் திகழ்வது ஐந்தெழுத்து மந்திரமே என்று கூறி விளக்கம் தரத் 'துஞ்சலுந் துஞ்சலிலாத போதினும்' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடியருளினார் என்று வரலாறு சுட்டும்.

பதிகத்தின் இரண்டாவது பாடல் மறைகளில் வல்ல வேதியர்கள் நாடொறும் அந்திக்காலங்களில் ஓதவேண்டிய மந்திரம் திரு ஐந்தெழுத்து என்று சுட்டுகிறது. மேலும் இப்பதிகப் பாடல்கள் அனைத்தும் ஐந்தெழுத்தைப்பற்றியே எடுத்துரைப்பதால் இவண் மந்திரத்திற்குரிய விளக்கம் தரப் பாடப்பட்டமையே புலனாகிறது.

### பிற சான்றுகள் :

ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்தில் நம்பி யாண்டார் இச்செய்தியை,

> ''பன்மறையோர் செய் தொழிலும்
> பரம சிவா கமவிதியும்
> நன்மறையின் விதிமுழுதும்
> ஒழிவின்றி நவின்றனையே'' 34

என்றுகுறிப்பிட்டுள்ளனர். சேக்கிழார் இச்செய்தியைப்பற்றி விளக்கும்போது 'உருதிறத்தின் மறைநான்கும் தந்தோம்' என்று மந்திரங்கள் மொழிந்தவர்க்கு மதுரவாக்கால், ''பொருவிறப்ப ஓதினார் புகலிவந்த புண்ணியனார் எண்ணிறந்த புனித வேதம்''35 என்று சம்பந்தர் புதுமையாய் ஓதிநின்ற பாங்கினைப் பெரியபுராணத்தில் எடுத்துரைக்கின்றார். 'மறை நான்கும் தந்தோம்' என்று கூறிய மறையோர்களுக்கு ஓராசிரியனைப்போல விளக்கம் தந்ததால் சம்பந்தர் சிறப்பு நிலை அடைகிறார்.

### 3-2-3-4 பனிநோய் தீர்த்தல் :

திருச்செங்குன்றூரில் தங்கியிருந்த அடியார்களைப் பனிநோய் வருத்த 'அவ்வினைக் கிவ்வினை' எனும் பதிகம் பாடிச் சம்பந்தர் நோய் தீர்க்கிறார். ஒவ்வொரு பாடலும் 'திருநீலகண்டம்' என்று முடிவுறுவதால் இப்பதிகம், 'திருநீலகண்டப் பதிகம்' என்று அழைக்கப்படுகிறது. அடியார்களைப் பனிநோய்பற்றியது என்பதற்குப் பதிகத்தில் அகச் சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும் பாடல்களில் 'தீவினை' என்று சம்பந்தர்சுட்டுவது பனிநோயையே என்று சிலர்பொருள்கொண்டனர் என்று கொள்ளவேண்டியுள்ளது. ஆனால் இக்கருத்து ஊகத்தை அடிப்படையாகக் கொண்டதேதவிர நிறுவுவதற்கு வாய்ப்பேதுமில்லை.

#### பிற சான்றுகள் :

''மின்னார் குடுமி நெடுவெற்
பகங் கொங்கில் வீழ்பனிநோய்
தன்னார்வழி கெட்டழிந்தமை
சொல்லுவர் காண் இறையே''36

-என்று பனிநோய் தீர்த்தல் குறித்து நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார் இச்செய்தியை

''அவ்வினைக் கிவ்வினை' என்றெடுத் தையர் அமுதுசெய்த
வெவ்விடம் முன் தடுத்தெம்மிடர் நீக்கிய வெற்றியினால்
எவ்விடத் தும்அடி யார்இடர் காப்பது கண்டம்' என்றே
செய்வினை தீண்டா திருநீல கண்டம்''37

-என்றுகூறி மேற்செய்தியை விளக்கிக் காட்டக்காணலாம்.

## 3-2-3-5 விடம் தீர்த்தல் :

சோழ நாட்டைச் சேர்ந்த வணிகன் ஒருவன் தான் திருமணம் செய்துகொள்ளும் பொருட்டுக் கன்னி ஒருத்தியுடன் திருமருகல் மடத்தில் தங்கியிருக்க அப்போது ஆங்கோர் அரவம் தீண்ட இறந்தான். அவ்வணிகனை ஞானசம்பந்தர் உயிர்பெறச்செய்து திருமணம் செய்து வைக்கின்றார். முன்னர் அவலங்கொண்ட கன்னியின் துயர் போக்க இறைவனிடம் பின்வருமாறு முறையிடுகின்றார்

''சடையாய் எனுமால் சரண்நீ எனுமால்
விடையாய் எனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே''38

இப்பாடலில் அரவம் பற்றிய குறிப்பு இலைமறை காயாக இருக்கின்றதே தவிர வணிகனை அரவம் தீண்டியதாகக் குறிப்பில்லை எனவே, இப்பதிகப் பாடல்களை அகச்சான்றுகளாகக் கொள்வது பொருத்தமாயில்லை.

### பிற சான்றுகள் :

சம்பந்தரின் அருள் நிகழ்ச்சியினை விளக்கும் நம்பியாண்டார் நம்பிகள் பல இடங்களில் வணிகனை அரவம் தீண்டிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். சான்றாக,

''தாதமர் மருகல் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனைவிடமே அடைத்தது''39

என்ற பாடல் அடிகளைக் கொள்ளலாம். மேலும் தமது பாடலில் 'கடுவிடம்தீர்த்து' என்றும் 'விடம்தீர்த்த பிரான்' என்றும் குறிப்பிட்டுள்ளமையும் கருதத்தக்கதாம். பெரிய புராணத்தில் சம்பந்தர் வரலாற்றில் இடம்பெறும்

''மற்றிவனும் வாளரவு தீண்ட மாண்டான்
மறிகடலிற் கலங்கவிழ்த்தார் போல நின்றேன்
சுற்றத்தார் எனவந்து தோன்றி என்பால்துயர
மெலாம் நீங்கஅருள் செய்தீர் என்னக்,
கற்றவர்கள் தொழுதேத்துங் காழிவேந்தர்
கருணையினாற் காரிகையாள் தனக்கு நல்கப்,
பற்றியவாள் அரவுவிடந் தீருமாறு பனைமருகற்
பெருமானைப் பாட லுற்றார்''40

என்ற பாடல் இவ்வரலாற்றை விரிவாக எடுத்துரைக்கின்றது

### 3-2-3-6 யாழ்மூரிப் பாடுதல் :

திருநீலகண்ட யாழ்ப்பாணரின் சுற்றத்தினர் சம்பந்தரின் இசையின் பெருமையை உணர்ந்துகொள்ளும் பொருட்டு யாழில் அடங்காத இசை ஒன்றைப் பாடும்படிப் பாணர் கேட்கின்றார். அதற்காக 'மாதர் மடப்பிடி' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடுகின்றார். யாழை வலிமை பெறும் பொருட்டுப் பாடப்பட்ட யாழ்மூரிப் பதிகத்தில் இவ்வரலாற்றை உணர்த்தக்கூடிய செய்திகள் குறிப்பாகக் கூட இடம்பெறவில்லை.

**பிற சான்றுகள் :**

யாழ்மூரியைப் பற்றிய புறச்சான்றுகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. நம்பியாண்டார் நம்பி,

> ''ஏழிசை யாழை யெண்டிசை யறியத்
> துண்டப் படுத்த தண்டமிழ் விரகன்''41

என்றும்,

> ''பாமாலை யாழ்முரியப் பாணழியப் பண்டருள்செய்
> மாமான சுந்தரனவன் சம்பந்தமாமுனி''42

என்றும் சம்பந்தரைப் போற்றியுள்ளார். இவர் ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலையில் 'ஆக்கரிய யாழ்மூரி' என்றும் குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார், தோல்வியுற்ற பாணருக்கு ஞானசம்பந்தர் ஆறுதல்கூறும் நிகழ்ச்சியை,

> ''ஐயா! நீ யாழிதனை முரிக்கும் தென்
> ஆளுடையாளாளுடனே கூடச், செய்யசடை யாரளித்த
> திருவருளின் பெருமையெலாந் தெரிய நம்பால்
> எய்திய இக்கருவியினில் அளவு படுமோ நந்தம்
> இயல்புக்கேற்ப வையகத்தோர் அறிவுறஇக்
> கருவி அளவையின் இயற்றல் வழக்கே''43

என்று அமைத்துள்ளார்.

### 3-2-3-7 மறைக்கதவம் அடைத்தல் :

திருமறைக்காட்டில் காப்பிடப்பெற்ற கோயில் கதவினை அப்பரடிகள் பாசுரம் பாடித் திறக்க அதனைச்

சம்பந்தர் 'சதுரம்மறை' எனத் தொடங்கும் பதிகம்பாடி வழிபாடு முடிந்தபின்பு மூடச் செய்தார் என்று ஞானசம்பந் தரின் வரலாறு குறிப்பிடும். சம்பந்தரின் பாடல் ஒன்று இதனை உறுதிப்படுத்துகிறது. திருமுறையில்,

''சதுரம்மறை தான்றுதிசெய்து வணங்கும்
மதுரம்பொழில் சூழ்மறைக் காட்டுறை மைந்தா
இது நன்கிறை வைத்தருள் செய்கவெனக்குன்
கதவந்திருக் காப்புக்கொள்ளுங் கருத்தாலே''[44]

என்ற பாடலின் ஈற்றடி, கதவு மூடிக்கொள்ளுதலின் பொருட்டுப் பாடப்பட்டமைக்குரிய சான்றாகத் திகழ்கிறது.

## பிற சான்றுகள் :

திருமறைக்காட்டில் பதிகம் பாடிக் கதவினை அடைத்த அருட்செயலைப் போற்றி நம்பியாண்டார் நம்பி,

''இருகதவம் தான் அடைத்தும்''[45] என்றும்
''மாடத்தொளிருளும் மறைகாட் டிறைகதவைப்
பாடி அடைப்பித்த பண்புடை யான்''[46]

என்றும் குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார் இச்செய்தியை, அப்பரின் வாயிலாக,

''புறம்புவந் தணைந்தபோது புகலிகாவலரை நோக்கி
'நிறங்கிளர் மணிக்கபாடம் நீக்கவும் அடைப்பும் நிற்கத்
திறந்த வாறடைக்கப்பாடி அருளும்நீர்' என்றார் தீய
மறம்புரி அமணர்செய்த வஞ்சனை கடக்கவல்லார்''[47]

என்று கதவடைக்கச் சம்பந்தரிடம் வேண்டிக்கொண்டமை யைக் குறிப்பிடுகிறார். சேக்கிழார் இத்திருப்பதிகத்தை, 'நடைத்தமிழ்ப் பதிகமாலை' என்று சிறப்பித்துக் கூறுகிறார். உலகவர் அனைவரும் சைவநெறியைப் பின் பற்றி இறையின் அருள்பெற வேண்டும் என்ற கொள்கையில் சம்பந்தரும் நாவுக்கரசரும் இணைந்தே செயல்பட்டார்கள் என்பதே சேக்கிழாரின் கருத்து.

### 3-2-3-8 வெப்புநோய் தணித்தல்:

சம்பந்தர் மதுரையில் மடம் ஒன்றில் அடியார்களுடன் தங்கியிருக்கிறார். பாண்டியனின் ஒப்புதலோடு சமணர்கள் மடத்திற்குத் தீ வைக்கின்றனர். இதை அறிந்த ஞான சம்பந்தர் பாண்டியனையே இத்தீ சென்று சேரட்டும் என்ற கருத்துடன் பதிகம் ஒன்றைப் பாடவும் பாண்டியனுக்கு வெப்புநோய் உண்டாயிற்று.

சம்பந்தரின் இச்செயலுக்கு அகச்சான்றுகளாகச் சில பாடல்களைச் சுட்டலாம்.

''பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே''48
''எந்த ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன் தென்னன் பாண்டியற் காகவே'' 49
''அப்ப னாலவா யாதி யருளினால்
வெப்பம் தென்னவன் மேலுற''50

போன்ற அடிகள், ஞானசம்பந்தர், அடியார்க்கிட்ட தீயினை நோக்கிப் பாண்டியனைச் சென்று சேரும்படிக் கூறியமை தெரிகிறது.

#### பிறசான்றுகள் :

அடியவர்களுக்கு இடப்பெற்ற நெருப்பு, பாண்டியனை வந்து அடைந்த செய்தியை நம்பியாண்டார் நம்பிகள் குறிப்பிட்டுள்ளார். பாண்டிய நாட்டில் பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் சைவத்தைப் போற்றுபவராயினும் பாண்டியனும் மக்களும் சமணத்தைப் பின்பற்றி வாழ்ந்துவந்தனர். இக்காலத்தில் தான் தீயானது பாண்டினைப் பற்றியது என்பதை,

''அற்றைப் பொழுதத் தமணரிடு வெந்தீயைப்
பற்றிச் சுடுகபோய்ப் பாண்டியனை என்னவல்லான்'' 51

என்று நயமாகப் புலப்படுத்துகின்றார். இதைச் சேக்கிழாரும்

''வெய்ய தீங்கிது வேந்தன் மேற்றெனும் விதிமுறையால்
'செய்யனேதிரு வாலவாய்' எனுந்திருப் பதிகம்

சைவர் வாழ்மடத் தமணர்கள் இட்டதீத் தழல்போய்ப்
"பையவேசென்று பாண்டியற்கா"கெனப்பணித்தார்" 52
என்ற பாடலின் வாயிலாக உறுதிசெய்கிறார்.

பாண்டியனைப் பற்றிய வெப்புநோயைப் பற்றி அகப்புறச் சான்றுகள் கிட்டுகின்றன. வரலாற்றின் பிற்பகுதி சமணர்களால் இயலாதபோது ஞானசம்பந்தரே இந்நோயை 'மந்திரமாவது நீறு' எனும் பதிகம்பாடித் தீர்த்து வைக்கிறார் என்று கூறுகிறது. எனினும் அகச் சான்றாகச் சில பாடல்கள் கிடைக்குமோ என ஆராயுங்கால் அனைத்துப் பாடல்களும் திருநீற்றின் பெருமையைப் பற்றியே பேசுகின்றனவே தவிர, யாதோர் இடத்திலும் வெப்புநோய் நீக்கியது குறித்துக் குறிப்பேதும் தென்படவில்லை.

## 3-2-3-9 அனல் வாதம்

பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்க்க இயலாத சமணர்கள் சம்பந்தரை வெல்லக் கருதிச் சில உத்திகளைக் கையாண்டனர். இவற்றுள் அனல் வாதமும் ஒன்று. தத்தம் சமயம் குறித்த ஏட்டினைத் தீயிலிட, அழியாமலிருக்கும் ஏட்டிற்குரிய சமயத்தினரே வென்றவர் என்ற கருத்திற்கு உடன்பட்டுச் சம்பந்தர் 'தளிரிளவளரொளி' என்று தொடங்கும் பதிகத்தைப்பாடி இறைவனை வழிபட்டுப் பின் 'போகமார்த்த பூண் முலையாள்' என்ற திருப்பதிகத்தினை எழுதி எரியிலிட்டார். இப்பதிகம் தீயால் வேகாது நின்றது. இதனால் இப்பதிகம் 'பச்சைப் பதிகம்' என்ற சிறப்பையும் பெற்றது.

தீயிலிட்டு வேகாத ஏடு சைவர்களுடையது என்பதை நிறுவுவதற்குத் 'தளிரிளவளரொளி' எனத் தொடங்கும் பாடல்களே சான்றுகளாகத் திகழ்கின்றன.

"மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே" 53

"மீத்ம் தெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே" 54

''இட்டுறு மெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே'' 55

என்பன போன்ற ஈற்றடிகள் ஏட்டினைத் தீயிலிட்ட செய்தியைப் புலப்படுத்துகின்றன. மேலும் அரசன் முன்னிலையில் வளர்க்கப்பட்ட தீயில் ஏட்டினையிடும்போது இப்பாக்கள் பாடப்பட்டன என்பதை,

''....ஞான சம்பந்தன
கொற்றவ னெதிரிடை யெரியினி லிடவிவை கூறிய
சொற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே'' 56

எனவரும் திருக்கடைக்காப்புப் பாடலால் அறிந்து கொள்ளலாம், எனவே, சம்பந்தர் ஏட்டினைத் தீயிலிட்டுச் சமணர்களோடு போட்டியிட்டமைக்கு இப்பாடல்களே சான்றுகளாகத் திகழ்கின்றன.

### பிற சான்றுகள் :

''போகமார்ப்பைக்
காந்துங் கனலிற் குளிர்படுத்துக் கடற்கூடலின்வாய்
வேந்தின் துயர் தவிர்த்தானை''57

எனவரும் அடிகளால் அனல்வாதத்தை நம்பியாண்டார் நம்பி தனது திருவந்தாதியில் எடுத்துரைக்கின்றார். மேலும் தீயிலிட்ட அவ்வேடு சிவபரம்பொருளைப் பொருளாகக் கொண்டதால் அது எரியாமல் பச்சையாக விளங்கிற்று என்று சேக்கிழார் கீழ்வரும் பாட்டால் குறிப்பிடுவார்.

''இட்ட ஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப் பதிகம்
மட்டு லாங்குழல் வனமுலை மலைமகள் பாகத்
தட்ட மூர்த்தியைப் பொருளென உடைமையால் அமர்ந்து
பட்ட தீயிடைப் பச்சையாய் விளங்கிய தன்றே''58

## 3-2-3-10 புனல் வாதம்

இருமுறை தோல்வியுற்றும் அமைதியுறாத சமணர்கள் மூன்றாவது முறையாக ஞானசம்பந்தரைப் புனல் வாதத்திற்கு அழைத்தனர். 'இதில் தோல்வியுற்றோமானால் எங்களை இவ்வேந்தன் கழுவேற்றுங் கடமை

யுடையான்' என வெகுண்டு கூறினார். பின் சமணர்கள் 'அத்திநாத்தி' என்று வடமொழியால் எழுதி ஆற்றிலிடச் சம்பந்தர் 'வாழ்க அந்தணர்' எனத்தொடங்கும் தமிழ்ப் பதிகத்தைப் பாடி வைகையில் இட்டார். சைவ ஏடு எதிரேறியது. சைவர்களே வெற்றி பெறுகின்றனர். வெற்றி பெற்ற ஞானசம்பந்தர் 'வன்னியு மத்தமும்' என்ற பதிகம் பாடி இறைவனை வழிபட்டு மகிழ்ந்தார். இப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் இடம்பெறும்.

''கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை''[59]

போன்ற அடிகள் வைகையில் ஏடு சென்ற நிகழ்ச்சியைக் குறிப்பிடும். இதனை அகச்சான்றாகக் கருதமுடிகிறது.

## பிற சான்றுகள் :

நம்பியாண்டார் நம்பி பிள்ளையாரின் வெற்றியைக் குறித்தும் சமணர்களின் தோல்வியைக் குறித்தும் பல்வேறு இடங்களில் குறிப்பிட்டுள்ளார். குறிப்பாக,

''வைகையில் சமணரை வாதுசெய் தறுத்த''[60]

என்று திருமும்மணிக்கோவையில் சமணரின் தோல்வியைப் பற்றிக் குறித்துள்ளார். மேலும் தோற்ற சமணர்களைக் கழுவிலேற்றிய செய்தியையும்

''வாதில் அமணர் வலிதொலையக் - காதலால்
புண்கெழுவு செம்புன லாறோடப் பொருதவரை
வண்கழுவில் தைத்த மறையோனை''[61]

போன்ற அடிகளால் விளக்கியுள்ளார்: 'வாதத்தில் தோல்வியுற்றால் கழுவிலேற்றப்படுவோம்' என்று சமணர்களே தண்டனை இன்னதென்று முடிவுசெய்தனர் என்ற குறிப்புச் சேக்கிழாரின் பெரிய புராணத்தில் காணப்படுகிறது.

''மன்னவன் மாறன்கண்டு மந்திரியாரை நோக்கி
'துன்னியவாதில் ஒட்டித்தோற்ற இச்சமணர் தாங்கள்
முன்னமே பிள்ளை யார்பால் அநுசிதம் முற்றச்செய்தார்
கொல்நுனைக் கழுவில் ஏற முறைசெய்க என்று, கூற''[62]

என்றமைகின்றது ஒரு பாடல்.

## 3-2-3-11 ஓடம் உய்த்தல் :

திருக்கொள்ளம்பூதூர் என்பது வெட்டாற்றின் வட கரையில் உள்ள ஓரூர். ஆங்கு ஞானசம்பந்தர் அடியார்கள் சூழ இறைவனைக் காணச் சென்றார். அப்போது முள்ளி யாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. ஓடங்கள் செயலிழந்தன, வெள்ளத்தின் வேகத்தை எதிர்கொண்டு 'கொட்டமே கமழும்' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியவாறு இறைவனதருளை இறைஞ்சியவாறு புணை யின் துணைகொண்டு மறுகரையை அடைந்தார்.

இவ்வரலாறு உண்மையா? சம்பந்தரின் இப்பதிகம் பாடி முடியுமுன்பே ஓடம் மறுகரையைத் தீண்டியது என்பதை,

''ஓடம் வந்தணையும் கொள்ளம் பூதூர்
ஆடல்பேணிய அடிகளை யுள்கச் செல்லவுந்துக''[63]

எனும் செய்யுளால் அறியலாம்.

''ஆறுவ ந்தணையுங் கொள்ளம்பூதூர்'' என்ற ஏழாம் பாசுரமும் குறிக்கத்தக்கது.

### பிற சான்றுகள் :

நம்பியாண்டார் நம்பிகள்
''நதிப்புனலினெதிர் பஃறியுய்த்தன''[64] என்றும்
''கொள்ளம் பூதூர்க்குழகன் நாவாயது கொடுப்ப
உள்ளமே கோலாக யூன்றினான்''[65]

என்றும் பாடல்களை முறையே ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகத்திலும், ஆளுடைய பிள்ளையார் திருத் தொகையிலும் குறிப்பிட்டுள்ளார். இந்நிகழ்ச்சிக் குறித்து,

தேவர்பிரான் அமர்ந்தருக் கொள்ளம்
பூதூர் தோன்றத் திருவுள்ளம் பணியச்சென்று
மேவுதலால் ஓடங்கள் விடுவார் இன்றி ஒழிந்திடவும்
மிக்கதோர் விரைவால் சன்பைக் காவலனார்
ஓடத்தின் கட்டவிழ்த்துக் கண்ணுதலான்

திருத்தொண்டர்

தம்மை ஏற்றி நாவலமே கோலாக அதன்மேல் நின்று
நம்பர்தமைக் 'கொட்டம்' என்று நவின்று பாட''[66]

என்று பெரிய புராணமும் விரித்துரைக்கும்.

## 3-2-3-12 ஆண்பனையைப் பெண்பனையாக்குதல் :

திருவோத்தூர் எனும் ஊரில் சிவனடியார் ஒருவர் வாழ்ந்துவந்தார். இவர் வேளாண்மை செய்து பெற்ற பனை மரங்கள் குலையீன்றக் காணமையாலும், சமணரின் ஏளனத்தாலும் மிக்க வருத்தமுற்றார். அத்தனையும் ஆண் பனைகள். இந்நிலையினைச் செவிகொண்ட சம்பந்தர் 'பூந் தேர்ந்தாயன' எனும் பதிகம் பாடி அனைத்தையும் பெண் பனைகளாக மாற்றியருளி அடியாரின் இடர் களைந்தார். ஆண்பனை குலையீன்ற செய்தியை இப்பதிகத்தின் திருக் கடைக்காப்பில் தருகின்றார். அது வருமாறு:

''குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுண் ஞானசம்பந் தன்சொல்
விரும்பு வார்வினை வீடே''[67]

என்பதாகும். குலையீன்ற செய்தியைப்பற்றி ஞானசம் பந்தரே குறிப்பிடுவதால் இப்பாடல் அகச்சான்றாக அமையும்.

### பிறசான்றுகள்:

நம்பியாண்டார் நம்பி தமது படைப்பில் ஆண்பனை பெண்பனையான செய்தியை ஆங்காங்கே தருகின்றார்:

''அணங்கமர் யாழ்முரித் தாண்பனை
பெண்பனையாக்கி''[68]

''அருமறை ஓத்தூர் ஆண்பனை அதனைப்
பெருநிறம் எய்தும் பெண்பனை யாகவோ''[69]

''....எம்பெருமான் மன்னு திருவோத்தூரில்
ஆண்பனைகள் பெண்கள் ஆக்கியும்''[70] என்றும்

''திருவோத்தூர் ஆண்பனையைப்
பெண்பனையா கென்னும்''[71] என்பன சில.

இவை அனைத்தும் ஆண்பனைகளைப் பெண்பனைக ளாக்கிய வரலாற்றிற்குப் புறச்சான்றுகளாகும்.

பலர் முன்னிலையில் ஞானசம்பந்தர் ஆண்பனை களை எல்லாம் பெண்பனைகளாக்கிய செய்தியை,

''விருப்பு மேன்மைத் திருக்கடைக்காப் பதனில் விமலர்
அருளாலே ''குரும்பை ஆண்பனை ஈனும்'' என்னும்
வாய்மை குலவுதலால் நெருங்கும் ஏற்றுப்பனை
யெல்லாம், நிறைந்த குலைகளாய்க் குரும்பை,
அரும்பு பெண்ணையாகி யிடக்கண்டோ ரெல்லாம்
அதிசயித்தார்''[72]

என்ற சேக்கிழாரின் பாடல் உறுதி செய்கிறது.

## 3-2-3-13 எலும்பைப் பெண்ணாக்குதல் :

சிவநேசச் செட்டியார் எனும் பெயர் கொண்ட இறை யன்பர் ஒருவர் மயிலாப்பூரில் வாழ்ந்துவந்தார். அவர் மகள் அரவம் தீண்டி இறக்க, மகளின் எலும்பையும் சாம்பலையும் ஒரு மட்பாண்டத்திலிட்டு இறைவனின் சந்நிதியின் கண் வைத்துச் சம்பந்தர் முன் நின்றார். 'மட்டிட்ட புன்னை' எனத் தொடங்கும் பதிகம் பாடி பிள்ளையார் மகட்கு உயிரூட்டுகின்றார். பதிகப் பாடல்களின் ஈற்றடிகள்,

''கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்''[73]

''நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய்'' [74]

''பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய்[75]

என்று பல வண்ணமாக அமைந்துள்ளன. இவையே, சம்பந் தரின் இவ்வருட்செயலுக்குப் போதிய அகச்சான்றுகள்.

## பிற சான்றுகள்

விடத்தால் இறந்த 'பூம்பாவைய மீண்டும் உயிர்ப்பெற்று வருக' என அழைத்த பிள்ளையாரது அருட் செயலை, நம்பியாண்டார் நம்பி, கொடுமையான விட

மானது உடலில் பரவியதனால் இறந்த பெண்ணை வா என்று அழைத்து உயிர்ப்பித்துக் கொடுத்தவர் ஞானசம்பந்தர் என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே சேக்கிழாரும் பூம்பாவை உயிர்த்து எழுந்த செய்தியை,

> ''தேற்ற மில்சமண் சாக்கியத் திண்ணரிச் செய்கை
> ஏற்ற தன்றென எடுத்துரைப்பார் என்றபோது
> கொற்றொ டிச்செங்கை தோற்றிடக் குடம் உடைந்தெழுவாள்
> போற்று தாமரைப் போதவிழ்ந் தெழுந்தனள் போன்றாள்''[76]

என்ற பாடலின் மூலம் தருகின்றார்.

## 3-2-3-14 திருமணமும் சோதியில் கலத்தலும் :

ஞானசம்பந்தர் உறவினர்களின் வற்புறுத்தலால் திருமணம் கொண்டு 'நல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகத்தைப் பாடித் திருமணத்தில் தனக்கு விருப்பமில்லை என்ற செய்தியை உணர்த்தினார். பிறகு இறைவனின் ஆணைப்படி, 'காதலாகி' என்ற பகிதம் பாடியவாறு சுற்றஞ்சூழ சோதியில் மறைந்தார்.

> ''கல்லூர்ப் பெருமணம் வேண்டா''[77]

என்ற முதற்குறிப்புடைய திருப்பதிக அடி மூலம் சம்பந்தருக்குத் திருமணத்தில் விருப்பமில்லை என்பது தெரிய வருகிறது. மேலும் திருமணம் நடந்தேறியபின் வீடுபேற்றில் ஈடுபாடு கொண்டு இறைவனடி சேர்ந்திருக்கிறார் என்பதற்கு,

> ''நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய
> வேதனை தாழ்தொழ வீடெளிதாமே''[78]

போன்ற அடிகள் ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

## பிற சான்றுகள் :

ஞானசம்பந்தர் நல்லூரில் திருமணஞ் செய்து கொண்ட நிகழ்ச்சியைப் பற்றியும், இறைவன் அடியைச்

சேர்ந்த நிகழ்ச்சியையும் இணைத்து,

''சித்தங் களிப்பத் திருமணஞ்செய் காவணத்தே
அற்றைப் பொழுதத்துக் கண்டுடனே நிற்கப்
பெற்றவர்க ளோடும் பெருமணம் போய்ப் புக்குத்தன்
அத்தன் அடியே அடைந்தான் அழகிதே''79

என்று நம்பியாண்டார் நம்பி குறிப்பிட்டுள்ளார். மேலும்

'' .. .................. திருஞானசம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியதன் உட்புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி உடனானார்''80

என்ற பாடலின் வாயிலாகச் சேக்கிழார் ஞானசம்பந்தர் சோதியுள் கலந்த நிகழ்ச்சியைத் தெளிவு படுத்தியுள்ளார். திருநீலநக்க நாயனார், முருக நாயனார், சிவபாத இருதயர் நம்பாண்டார் நம்பி, திருநீலகண்ட யாழ்ப்பாணர், அடியார் கள், முனிவர்கள், முத்துச்சிவிகை சுமந்தவர்கள் முதலா னோர் சோதியிற் கலந்த பிறகே சம்பந்தர் தன் மனை வியாரோடு சோதியிற் கலந்ததாகக் குறிப்பர்.

## 3. 3 ஞானசம்பந்தரும் இறைத்தன்மையும் :

ஞானசம்பந்தர் இறைநிலை அடைந்தமைக்கு முக்கி யமாக மூன்று காரணங்களைச் சுட்டலாம்.

1. தேவாரப் பாக்களைப் பாடியமை
2. சைவ சமயம் வளர்த்தமை
3. அருட் செயல்களை (தொண்டு) ஆற்றியமை

சம்பந்தர் ஞானப்பால் உண்டதனால் பாடல்களைப் பாடினார் என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியதும், மறுக்கக் கூடியதுமாக இருப்பினும் சம்பந்தர் தேவாரப்பாக்களைப் பாடினார் என்பது உண்மை. அறுபத்து மூன்று நாயன் மார்களின் வரலாற்றை நோக்கும்போது சம்பந்தர் மட்டுமே சமண சமயத்தை எதிர்த்துப் போராடியுள்ளார் என்பது தெரிகிறது. இவரது பாடல்களே இதற்கு சான்றுகளாகவும்

உள்ளன. மேலும் தான் வாழ்ந்த பதினாறு ஆண்டுகளுக்குள் பல்வேறு அருட்செயல்களைச் செய்திருக்கின்றார். எனவே மேற்சுட்டிய காரணங்களே ஞானசம்பந்தரின் இறை நிலைக்கு அடிப்படையாக விளங்கியமை புலனாகும்.

## 3. 4 முடிவுரை :

சுந்தரர், நம்பியாண்டார் நம்பி போன்றோர் அடியார்களின் வரலாற்றைச் சுருக்கமாகத் தமது படைப்புகளில் குறிப்பிட்டுள்ளனர். ஞானசம்பந்தரின் வரலாற்றை மிக விரிவாகக் கூறவேண்டிய தேவை கருதிச் சேக்கிழார் பெரிய புராணத்தில் பிள்ளையாரைப்பற்றி மிக விளக்கமாகக் கூறியுள்ளார்.

சம்பந்தர் நிகழ்த்திய அருட்செயல்கள் சிலவற்றிற்கு நேரடியான அகச்சான்றுகள் கிடைக்கவில்லை. இருப்பினும் ஒருசில சொற்களின் வாயிலாக அச்செயல்கள் நடந்தேறியுள்ளதாகப் பொருள்கொள்ள வேண்டியுள்ளது. இவரது அற்புதங்களில் தாளம் பெற்றது, ஆண்பனையைப் பெண்பனையாக்கியது, பூம்பாவையை உயிர்ப்பித்தது, 'வெப்பு நோய் தணித்தது போன்ற செயல்கள் பலர் முன்னிலையில் நிகழ்ந்துள்ளது என்பதற்கான சான்றுகள் புறச்சான்றுகளின் வாயிலாகக் கிடைத்துள்ளன.

ஞானசம்பந்தரின் வரலாற்றை நோக்கும்போது சிவனடியார் மற்றும் இறைவன் மீது பற்றுடையார்களின் துயரை மட்டுமே அவர் போக்கியிருப்பது தெரிய வருகிறது. எனவே 'சிவத்தை நாடியவர்க்குத் துயரில்லை' என்ற கருத்து இங்கு முதன்மைப்படுத்தப்படுகிறது. ஞானசம்பந்தர் இன்றைய நிலையில் இறைமைப்படுத்துவதற்கு முதற்காரணமாகத் திகழ்வன அவர் செய்த அருட்செயல்களே ஆகும்.



## குறிப்புகள்

1. உமாபதி சிவாசாரியார், திருமுறைகண்ட புராணம் ப. 32.
2. மேலது, ப. 32.
3. தேவாரம், 3:28 2:2.
4. மேலது., 3: 345:11
5. மேலது., 7: 98:9.
6. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், வரிகள் 13-16, 21-24.
7. தேவாரம், 7: 62:8.
8. நம்பியாண்டார் நம்பி, அளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 82.
9. பெரிய புராணம், திருஞானசம்பந்தர் புராணம் பா. 103.
10. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 83.
11. பெரிய புராணம், ஞா. பு: பா. 197
12. வை. இரத்தினசபாபதி, திருஞானசம்பந்தர் ஆய்வு I, ப. 208.
13. பெரிய புராணம், தி:பு, பா. 392.
14. தேவாரம், 3: 262:1.
15. மேலது., 3: 262:11
16. பன்னிரு திருமுறை வரலாறு. I, பக். 81-82.
17. தேவாரம், 4: 56:1.
18. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, பா. 4.
19. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை, பா. 5.
20. பெரிய புராணம், ஞா. பு., பா. 426.
21. தேவாரம், 1: 92:1.
22. தேவாரம், 5: 50:5.
23. தேவாரம், 7. பா. 899

24. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை, பா. 75.
25. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 41.
26. பெரிய புராணம், ஞா. பு., பா. 570.
27. தேவாரம், 1:4:4:1.
28. மேலது., 1:4:4:3.
29. மேலது., 1:4:4:10.
30. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, வரி. 32.
31. பெரிய புராணம், ஞா. பு., பா. 318.
32. வை. இரத்தின சபாபதி, திருஞானசம்பந்தர் ஓர் ஆய்வு II. பா. 20.
33. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 17.
34. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், வரிகள் 33-36.
35. பெரிய புராணம், ஞா. பு., 264.
36. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 76.
37. பெரிய புராணம், ஞா. பு., பா. 335.
38. தேவாரம், 2:154:1.
39. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, வரிகள். 34-35.
40. பெரிய புராணம், ஞா. பு., பா. 481.
41. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, வரிகள் 8-9.
42. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், பா. 26.
43. பெரிய புராணம், ஞா. பு., பா. 450.

44. தேவாரம், 2:173:1.
45. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை. பா. 16.
46. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, பா. 40.
47. பெரிய புராணம், ஞா. பு., பா. 586.
48. தேவாரம், 3:309:1.
49. மேலது., 3:309:2.
50. மேலது., 3:309:11.
51. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, வரிகள் 48-51.
52. பெரிய புராணம், ஞா. பு., பா. 704.
53. தேவாரம், 3:345:1.
54. மேலது., 3:345:2.
55. மேலது., 3:345:3.
56. மேலது., 3:345:11.
57. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 71.
58. பெரிய புராணம், ஞா. பு., பா. 786.
59. தேவாரம், 3:290:11.
60. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, பா. 13.
61. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை, பா. 15.
62. பெரிய புராணம், ஞா. பு., பா. 853.
63. தேவாரம், 3:264:6.
64. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம், பா. 35.
65. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, வரிகள் 30-31.

66. பெரிய புராணம், ஞா. பு. பா. 898.
67. தேவாரம், 1:54:11.
68. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, பா. 39.
69. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை, பா. 4.
70. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை, பா. 80.
71. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, வரி 30.
72. பெரிய புராணம், ஞா. பு., பா. 980.
73. தேவாரம், 2:183:1
74. மேலது., 2:183:6.
75. மேலது., 2:183:9.
76. பெரிய புராணம், ஞா. பு. பா. 1090.
77. தேவாரம், 3:383:1.
78. மேலது., 3:383:10.
79. நம்பியாண்டார் நம்பி, ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை, பா. 65.
80. பெரிய புராணம், ஞா. பு. பா. 1253.



*சிவன்அடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*
*பவம்அதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்*
*உவமைஇலாக் கலைஞானம் உணர்வுஅரிய மெய்ஞ்ஞானம்*
*தவம்முதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்*
*-பெரியபுராணம்*

# இலக்கியங்களில் திருஞானசம்பந்தர்

## 4. 0. முன்னுரை

திருஞானசம்பந்தர் வரலாற்றைத் திருத்தொண்டர்த் தொகை, பதினோராம் திருமுறை, பெரியபுராணம் போன்ற நூல்கள் விளக்கியதைத் தொடர்ந்து பல்வேறு இலக்கியங் களும் அவரைப் பற்றிய குறிப்பினைப் பல்வேறாகத் தந்துள்ளன. திருக்களிற்றுப்படியார், தக்கயாகப்பரணி, நால்வர் நான்மணிமாலை, திருத்தொண்டர்மாலை, திருப்புகழ், குமரகுருபரின் பிரபந்தத்திரட்டு, திருஅருட்பா போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கவை. பெரியபுராணம் பதினொன்றாம் திருமுறை போன்ற நூல்களுக்குப் பின்வந்த இலக்கியங்கள் ஞானசம்பந்தரின் அருட்செயல்களை முற் சுட்டியவாறே எடுத்துரைக்கின்றனவே தவிர மாறுபாடு ஒன்றும் காணப்பெறவில்லை.

சில பாடல்கள் சம்பந்தரை முருகனின் அவதாரமாகக் கூறியுள்ளன. சிற்றிலக்கிய வகைகளுள் பிள்ளைத்தமிழ், உலா போன்றவைகளும் தத்தம் இலக்கணத்திற்கேற்ப இவர்தம் வரலாற்றைச் சுட்டிச்செல்கின்றன. ஞானசம்பந் தனாகக் 'குழந்தைக்கவி' என்ற நிலையிலிருந்து முருகனின் அவதாரமாகக் கொள்வதற்கு இவ்விலக்கியங்களே ஆதார மாக உள்ளன.

## 4.1. திருக்களிற்றுப்படியார் :

'திருக்களிற்றுப்படியார்' எனும் சைவ நூல் உய்யவந்த தேவநாயனார் என்பவரால் இயற்றப்பட்டதாகும்.

இந்நூலின் காலம் கி.பி. 1178 ஆகும். இந்நூலாசிரியர் தாழ்ந்த இனத்தவர் என்பதால் இந்நூல் பலரால் ஒதுக்கப்பட்டது. பொன்னம்பலத்தானின் பஞ்சாக்கரப்படியில் வைக்கப்பட்ட இந்நூலை அப்படியில் அமைந்திருக்கும் கல் யானை தன் துதிக்கையால் எடுத்துப் பெருமானின் திருவடிக்கீழ்சேர்த்த காரணத்தினால் இந்நூல் 'திருக்களிற்றுப் படியார்' என்று அழைக்கப்பட்டது.

இந்நூல் சிவயோகம், ஞானியார் இயல்பு, அருள்பெறுவதற்குரிய நெறி போன்ற செய்திகளை எடுத்துரைப்பதோடு சமயகுரவர்களைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. திருநனிப்பள்ளியில் பாலையை நெய்தலாக்கிய செய்தியை,

''பாலை நெய்தல் பாடியதும்''[1]

என்று குறிப்பிட்டுள்ளார்.

உமையம்மை ஞானசம்பந்தருக்குத் தன் திருமுலைப் பாலுடன் சிவஞானத்தையும் கலந்து ஊட்டினார் எனக் கேட்ட அளவிலேயே தென்பாண்டி நாட்டில் அரச மாதேவியாய் இருந்த மங்கையர்க்கரசியார் பால்சுரக்கும் மார்பினையுடையவரானார் என்ற செய்தியை ஆசிரியர்,

''சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானம்
சுரந்துண்டார் பிள்ளைஎனச் சொல்லச்-சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையாள் அன்பிருந்த வாறு''[2]

என்ற பாடல் வாயிலாகத் தருகின்றார். மேலும் ஒரு பாடலில்,

''அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்
எங்கும்இலை கண்டாய் இது''[3]

என்று குறிப்பிடுவதன் வாயிலாக, என்பைப் பெண்ணாக்கிய செய்தி கூறப்படுகிறது. இவையன்றி ஓடம் கொண்டு கரை தாண்டியதும், சிவிகை பெற்றதும், உலவாக்கிழி

உற்றதும், மறைக்கதவம் அடைத்ததும், ஆண்பனையைப் பெண்பனையாக்குதலும், பொற்தாளப்பேறும், பாலையை நெய்தலாக்குதலும் மற்றும் மதுரையில் அனல் புனல் வாதம் நிகழ்த்தியதும் பேசப்பெறுகின்றன.

''ஓடம் சிவிகை உலவாக்கிழி அடைக்கப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல்-ஏடுஎதிர் வெப்பு
என்புக்கு உயிர்கொடுத்தல் ஈங்கிவைதாம்ஓங்கு புகழ்
தென்புகலி வேந்தன் செயல்''[4]

என்ற ஒரு பாடல் இவற்றைச் சுருக்கி விளக்குகிறது. நிகழ்வுகளின் வரிசை இப்பாடலில் மாறியுள்ளது.

## 4.2. தக்கயாகப்பரணி :

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டினராகிய ஒட்டக் கூத்தர் தாம் பாடிய தக்கயாகப் பரணியில் சம்பந்தருக்குப் பேரிடம் அமைத்துள்ளார். இவர் தமது நூலின்கண் ஞான சம்பந்தரை முருகன் அவதாரமாகவே கூறியுள்ளார்.

நூலின் கடவுள் வாழ்த்துப் பகுதியில் உமாபாகர், விநாயகக் கடவுள், முருகக் கடவுள் போன்றோரை வாழ்த்தியபின் 'திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை'யும் வாழ்த்தியுள்ளார். அப்பாடல்,

''வழுவேறு குடகூடல் வடவாறு வழிமாற
மணலாலெலாரோர்
கழுவேறு மமண்மூகர் கருமாள வறாமீளி கழல்
பாடுவாம்''[5]

என வருவதாகும்.

'கோயிலைப் பாடியது' பகுதியில் தேவியினுடைய கோயில் வருணனை, கோயிலிலுள்ள தேவியின் சிறப்பு மற்று ம்பஞ்சாயுதங்களின் செயல்கள் போன்றவற்றைப் பாடியிருப்பதுடன் ஆளுடையபிள்ளையார் சமணரை வாதில் வென்றகதையையும் ஒட்டக்கூத்தர் குறிப்பிட்டுள்ளார்.

'கோயிலைப் பாடியது' என்ற பகுதி முருகப்பெரு மானே சம்பந்தராக அவதரித்துச் சமணர்களை வாதில் வென்றார் என்ற செய்தியைப் பல பாடல்களின் வாயிலாக உணர்ந்து கொள்ளத் துணை செய்கின்றது. சான்றாக,

''எழுமலை கொல்லுமசனி யிளமயில் வள்ளிகணவ
னிறைமலை வில்லிபுதல்வ னிகன்மகளையைக் களிறு
கழுமல முய்யவிரவு, கலியுக வெல்லை பொருத
கதைகளி லுள்ள தமணர் கழுமிசை கொள்வதிதுவே''[6]

என்ற பாடலுள், வள்ளியின் கணவனான முருகப்பெருமான் அமணர்களைக் கழுவிலேற்றினான் என்ற பொருளைத் தந்து முருகனையும், ஞானசம்பந்தரையும் இணைப்பது புலனாகிறது. இந்நூலுக்கு உரையியற்றிய உரையாசிரியரும் சம்பந்தரை முருகப்பெருமான் என்றே குறிப்பிட்டுள்ளார்.

ஞானசம்பந்தரைப் 'பரசமய கோளரி' என்ற வேறு பெயரால் அழைப்பதும் உண்டு. இப்பெயரும் சமணர்களைக் கழுவிலேற்றிய செய்தியும் ஒருங்கே கூட்டப்பெற்று

''ஞாயில் கொண்ட மதிற்புறம்பர
சமயகோளரி நண்ணியே
கோயில் கொண்ட மடத்தை வெங்கனல்
கொண்டுகுண்டர் கொளுத்தவே''[7]

என்ற பாடலில் தரப்பட்டுள்ளது. சமணர்களை வாதில் வென்றமை 'கோயிலைப் பாடியது' எனும் பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. தக்கயாகப் பரணியில் ஞானசம்பந்தர் 'ஐயைகளிறு'[8] 'மலைவில்லி புதல்வன்'[9] 'பரசமய கோளரி'[10] 'பிள்ளை'[11] 'பிள்ளையார்'[12] 'வைதிகராச சிங்கம்'[13] 'கொச்சைப் பெருமான்'[14] 'வைதிக வாரணம்'[15] 'இமவான் மகளார் மகன்'[16] 'நான்மறை ஏறு'[17] என்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றார்.

### 4.3. நால்வர் நான்மணிமாலை :

துறைமங்கலம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் 'நால்வர் நான்மணிமாலை' என்ற நூலை இயற்றியுள்ளார். இந் நூலில் சைவ சமயக் குரவர் நால்வரைப் பற்றிய குறிப்பு கள் அமைந்துள்ளன. இதிலும் சம்பந்தரைப் பற்றிய பாடல் களே மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

சீகாழிப்பதியில் குழந்தை ஞானசம்பந்தன் அழுகை நிலைகண்டு, சிவபெருமான் அம்மையிடம் 'முலைப்பாலி னைக் சுரந்து ஊட்டுக!' என்று கூற அம்மையும் இதற் கிணங்கினாள் எனும் நிகழ்ச்சியை,

''இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்றின் - நிலைவிளம்பக்
கொங்கை சுரந்த அருட்கோமகளோ சம்பந்தன்
இங்குயர்ந்தான் ஆர்சொல் எனக்கு''[18]

என்ற பாடல் உணர்த்துகின்றது. ஞானசம்பந்தரை மிகப் போற்றி, அவர்தம் அருட்செயல்களைச் சிவப்பிரகாச சுவாமிகள் நிரம்பப் பாடியுள்ளார். குறிப்பாக ஆண்பனை யைப் பெண்பனையாக்கிய செய்தி, வணிகனின் விடம்தீர்த் தல், எலும்பைப் பெண்ணாக்கியமை போன்ற செய்திகள் பின்வரும் பாடலின்கண் மொழியப்பெறுகின்றன அப்பாடல்,

''பயனாகும் நல்லான் பனைக்கு விடத்திற்கு
மயிலாகும் நோய்க்கு மருந்தாம் - உயிராகும்
சிந்துமெலும் பிற்குச் சிரபுரத்து நாவலன் சம்
பந்தன் இயம்புதிருப் பாட்டு''[19]

என்பதாகும். 'மனிதன் தன்னை தெய்வ நிலையில் உயர்த்தி நின்றபோது அருளாற்றல் அவனுள்ளத்திற் பலவகை ஒலி களை எழுப்பும். இப்பாடலுக்கு விளக்கம் தரும் வை. இரத்தினசபாபதி 'இவற்றால் அமைவனவே மந்திரங் கள்' என்று குறிப்பிடுகின்றார். இக்கருத்தின் அடிப்படை யில் சம்பந்தப்பெருமானின் திருவாயிலிருந்து தேவாரப் பாக்கள் பிறந்திருக்கின்றன என்பது தெரியவருகின்றது.

உமையம்மையின் ஞானப்பாலுண்டதினால் பாடும் திறம்பெற்ற ஞானசம்பந்தரை நோக்கி,

''மகிழ்ச்சி மிகவுண்டு போலுமெதிர் வந்து
புகழ்ச்சியொடு நீ பாடும்போது-நெகிழ்ச்சி மலர்ச்
சிந்தையினும் வண்டிரையுந் தண்புகலிச் சம்பந்தா
தந்தையினும் பால்கொடுத்த தாய்க்கு''[20]

என்கிறார். இங்கு, தேவாரப் பாக்களைப் பாடும்போது அதனைக் கேட்டு மகிழும் உமையம்மையின் மகிழ்ச்சியைக் குறிப்பிடுகின்றார். மேலும், முத்துச்சிவிகை பெற்றது, ஆண்பனையைப் பெண்பனையாக்கியது, அனல் புனல்வாத வெற்றி, திருமணக்கோலத்தைக் காண வந்த அனைவருக்கும் வீடுபேற்றை அளித்தது போன்றவற்றை எடுத்துரைப்பதோடு இறுதிப்பாடலில் திருஞானசம்பந்தப் பெருமானின் திருவடிகளே சிவஞானம் என்பதை,

''எல்லாம் திருஞான சம்பந்தன் சேவடியே''[21]

என்றும் குறிப்பிடுகின்றார்.

## 4.4. திருத்தொண்டர்மாலை :

'திருத்தொண்டர்மாலை' என்ற நூல் குமாரபாரதி என்பவரால் இயற்றப் பெற்றதாகும். வெண்பாக்களால் ஆன இந்நூல் நாயன்மார் வரலாற்றையும், குறள்நெறி யையும் இணைத்து அளிக்கிறது. மங்கையர்க்கரசியார், திரு நீலகண்ட யாழ்ப்பாணர், குலச்சிறையார் முதலியோரைப் பற்றியும், சம்பந்தர் ஓடம் செலுத்திய நிகழ்ச்சி, சமணர் கழுவேற்ற நிகழ்ச்சி பற்றியும் இந்நூலில் பேசப் பெற்றுள்ளன.

### 4.4.1 ஞானசம்பந்தரின் பிறப்பு :

'புகலிப் பிள்ளையார்' என்று அழைக்கப்படும் ஞான சம்பந்தர் பிள்ளைப் பருவத்திலேயே பெற்ற சிறப்புகளால் புகழ்ந்துரைக்கப்படுகிறார். இக்கருத்தை, இவவுலகில் பிறந்தவர்கள் புகழுடன் திகழவேண்டும் என்ற குறள்நெறி யுடன் இணைத்து,

''வால வயதில் வளர்புகலிப் பிள்ளையார்
போல விசயம் புரிந்தவரார்-ஞாலமிசைத்
தோன்றிற் புகழொடு தோன்று அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று''[22] என்று

குறிப்பிடுகின்றார். ஞானசம்பந்தருக்குப் 'புகலிப் பிள்ளை யார்' என்ற வேறொரு பெயர் இருந்த செய்தியும் இதன் வழி புலப்படுகின்றது.

## 4.4.2. சமணர் கழுவேற்றம் :

சமணர்கள் சொற்றிறம் அறியாமல் அவருடன் அனல் வாதம், புனல்வாதம் செய்து முடிவில் தோல்வியுற்றனர். இதனால் எண்ணாயிரம் சமணர்கள் கழுவில் ஏறியதாக வரலாறு பகரும். இச்செய்தியைக் குறித்துத் 'திருத்தொண் டர் மாலை' குறிப்பிடும்போது சம்பந்தரைத் திருவள்ளுவர் கண்ட 'சொல்லேர் உழவருடன்' இணைத்துக் கூறும், இதை,

''பண்ணார் பசுந்தமிழ்ச்சம் பந்தரெதிர் வந்தமணர்
எண்ணாயிரம் கழுவில் ஏறினார் - ஒண்ணாது
வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர்பகை''[23]

என்ற பாடலின் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

## 4.4.3. ஆற்றைக் கடத்தல் :

ஞானசம்பந்தர் முள்ளியாற்றில் தன் பாவன்மையால் ஓடம் செலுத்திய செய்தியை,

''ஏறிய ஓடக்கோல் இசைஞானச் செந்தமிழால்
ஆறு கடந்தார் தோணி யார்மகனார் - வீறடங்கா
வெள்ளத் தனைய மலர்நீட்டம், மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு''[24]

என்று திருத்தொண்டர் மாலை குறிப்பிடுகின்றது. இங்கு சம்பந்தர், 'தோணியார் மகனார்' என்று அழைக்கப்படு கின்றார்.

## 45. திருப்புகழ் :

பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவரான அருணகிரிநாதர் தமது 'திருப்புகழில்' ஞானசம்பந்தரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவர், ஒட்டக்கூத்தரைப் போன்று சம்பந்தரை முருகனின் அவதாரம் என்று கூறும் கொள்கையுடையவர். பல இடங்களில் முருகனின் சிறப்பைக் கூறுமிடத்து, சம்பந்தரையும் இவர்தம் அருட்செயல்களையும் கூறுவதுண்டு.

பாண்டியனின் வெப்பொழித்ததன் காரணமாகச் சமணர்களை அழித்தவர் ஞானசம்பந்தராவார். இதனை,

> ''பொறியுடைச் செழியன வெப்பொழிதரப் பறிதலைப்
> பொறியிலச் சமணரைத் தனைபேரும்
> பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
> புகலியிற் கவுணியப் புலவோனே''[25]

என்று அருணகிரியார் குறிப்பிட்டுள்ளார். முருகப்பெருமானின் சிறப்பினைக் கூறுமிடத்து,

> ''பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக
> பாண்டிய னீறணிய மொழிவோனே''[26]

என்று கூறுகின்றார். இப்பாடல்களுக்கு விளக்கம் தரும் கிருபானந்தவாரியார், சைவ சமணப் போராட்ட காலத்தில் பாண்டியனுக்கேற்பட்ட வெப்புநோயைத் தணித்தவர்கள் சைவர்களாவர். சமணர்கள் இந்நோயைத் தீர்க்க முயன்று தோல்வி கண்டபோது சம்பந்தரே 'மந்திரமாவது நீறு' என்ற பாடலைப் பாடிப் பாண்டியனின் வெப்பொழித்தவர். இதனால் பாண்டியன் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறினான் என்ற பொருள்பட விளக்கமளிக்கிறார்.

எனவே, பாண்டியன் நீறணிவதற்குக் காரணமான சம்பந்தரின் செயலை, முருகப்பெருமானின் செயலோடு இணைத்துக் கூறுவதிலிருந்து ஞானசம்பந்தரை முருகப் பெருமானோடு ஒத்து நோக்கியமை புலனாகிறது.

## 4.6. குமரகுருபரசுவாமிகள் :

சுவாமிகள் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். தமது படைப்புகளில் ஞானசம்பந்தரைக் கழுமல மதலை யென்றும், கவுணியர் பெருந்தகையென்றும், புகலியர் குரிசிலென்றும் பலவாறாகச் சிறப்பித்துக் கூறுவார். சம்பந்தர் ஞானப்பாலுண்டது, பொற்றாளம் பெற்றது, வையையில் ஏடு எதிரேறச் செய்தது, சமணரை வாதில் வென்றது போன்ற நிகழ்ச்சிகள் இந்நூலில் காணப்படுகின்றன.

சம்பந்தர் பாண்டியனின் வெப்பொழித்த நிகழ்ச்சி 'மதுரைக் கலம்பகத்தில்' கூறப்படுகிறது. தன் மெய்வெப்பத்தையறிந்து திருநீற்றைப் பூசிய தோழியை நோக்கித் தலைவி கூறியதுபோன்ற பாடல் ஒன்று,

''ஆவா வென்னே தென்னவர் கோறகன் றணிசாந்தம்
நீவா நின்றாய் நின்றல காமா லைமென்னே
கோவாம் வில்லி கொடுந்தனு வுங்கூனிமிராதால்
மூவா முதலார் மதுரையி தன்றோ மொழிவாயே''[27]

என்பதாக அமைகிறது. இப்பாடலுக்கு உ.வே. சாமிநாத ஐயர் விளக்கம் தரும்போது 'திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பூசிய திருநீற்றாற் பாண்டியனுடைய சுர நோயும் கூனும் நீங்கியதுபோல, என்னுடைய சுரமும் மன்மதனுடைய வில்லின் வளைவும் நீங்கில; ஆதலால் இவ்வூர் மதுரையன்றோ வெனத் தலைவி மயக்கத்தாற் கூறினாள்''[28] என்று குறிப்பிடுகின்றார்.

குமரகுருபரர் தமது மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் ஞானசம்பந்தரைப்பற்றிய குறிப்பினையும் தருகின்றார். சீகாழியிலே அழுத பிள்ளைக்குத் திருமுலைப்பாலால் வயிற்றை நிரப்பியவள் மீனாட்சியம்மை என்பதை,

''செழுமறை நெளியவ டித்தத மிழப்பதி கத்தோடே
திருவரு ளமுதுகு ழைத்துவி டுத்தமு லைப்பாலாற்
கழுமல மதலைவ யிற்றைநி ரப்பிம யிற்சேயை''[29]

என்ற பாடலின் வழி அறிந்துகொள்ளலாம். பலகோடிப் பிள்ளைகளுக்குத் தாயாகிய உமையம்மை, திருஞானசம் பந்தர், முருகர், விநாயகர் ஆகியோருக்குத் தாய்ப்பாலை மட்டும் அளிக்காது அதனுடன் உணர்வையும், உயிரையும் அளிக்கவல்ல பக்தியினையும் கலந்து கொடுத்ததாக இந் நூலாசிரியர் பாடி மகிழ்கிறார்.

## 4-7 பிள்ளைத்தமிழில் ஞானசம்பந்தர் :

சிற்றிலக்கியங்களில் ஒருவகையான பிள்ளைத்தமிழ் ஞானசம்பந்தரின் வரலாற்றையும் பாடுபொருளாகக் கொண்டுள்ளது. திருஞானசம்பந்தருக்கென ஐந்து பிள்ளைத் தமிழ் நூல்கள் பாடப்பெற்றுள்ளன. திருவாவடுதுறை ஆதினத்து மாசிலாமணி தேசிகமூர்த்திகள், காரைக்குடி சைவ சித்தாந்தச் செல்வர் சொக்கலிங்க ஐயா, தணிகை மணி செங்கல்வராய பிள்ளை, கனகராஜ் ஐயர், இராம. சொ. சொக்கலிங்கம் ஆகிய ஐந்து அறிஞர்களும் சம்பந் தருக்குப் பிள்ளைத்தமிழ் படைத்தவர்கள் ஆவர். இவர் களுள் மாசிலாமணி தேசிகமூர்த்திகள் படைத்த பிள்ளைத் தமிழே மிகுந்த சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது.

இவரது பிள்ளைத்தமிழில் சம்பந்தர் மடத்திற்குச் சமணர்கள் தீயிட்ட செய்தியையும், பின்னர் அத்தீ பாண்டி யனை வெப்பு நோயாக வருத்த, சம்பந்தர் இந்நோயைத் தீர்த்துவைத்தார் என்ற செய்தியையும்,

''கூடலிற் சமண்மூகர் திருமடத் திட்டவெரி
கொற்றவற் பற்ற மொழியா
மாலொன்று மங்கையர்க் கரசியார் படுதுயரின்
வலிகண்டு சென்று தவிரா
வஞ்சப் பெருங்கூனும் வெப்பும்
தவிர்த்தருளும் மதுரவாசக''[30]

என்று குறிப்பிட்டுள்ளார்.

இப்பிள்ளைத்தமிழில் ஞானசம்பந்தர் 'அமனை அழித் தான்', 'கூனை ஒழித்தான்', 'விடம் தீர்த்தான்', 'தலை விழப்பார்த்தான்', 'மதுரை வென்றான்', 'அழகுற நின் றான்', 'மறை விளங்க வந்தான்', 'திருநெறி தந்தான்' 'திருமுலையுண்டு அழுதான்', 'கலியை நலிந்தான்' 'தேவர் தொழற்கரியான்' எனப் பல்வழியில் புகழ்ந்து அழைக்கப்படுகின்றார்.

செங்கீரைப் பருவத்தில் சம்பந்தப் பிள்ளையாரை முரு கனின் திருவவதாரம் என்றே குறிப்பிடுகின்றார். 'உரிமை யர் வேண்டிய கதிபெற வீந்தவன் மைந்தா' எனவும், சரப அவதாரம் எடுத்த சிவபிரான் மைந்தன் என்று குறிப்பு விளங்கும்படி 'அயல் உரைதாங்கிய சிறுவனோடு அன்று அறையும் தூணம் சீறிய அவன் உடல்தான் புடைதனிடை போழ்ந்து அணையும் கோள் துஞ்சாது வயவலிதான் சொலும் அளவினில் ஆங்கவன் வெங்கோபம் தீர வயிறு எரி தோன்றிட மிசைகொடு போழ்ந்தவன் மைந்தா' எனவும் 'இளங்கேசன் பாட எறிபடை ஈந்தவன் மைந்தா' எனவும் இப்பாட்டுடைத் தலைவர் சிவபெருமான் திருக்குமாரனே என்று கூறத்துணிகின்றார்''[31]

திருஞானசம்பந்தரின் வாழ்நாளில் அவர் நிகழ்த்திய அருட்செயல்களில் பெரும்பாலானவற்றை இப்பிள்ளைத் தமிழில் இந்நூலாசிரியர் பாடிச் சென்றுள்ளார்.

## 4-8 உலா இலக்கியங்களில் ஞானசம்பந்தர் :

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான உலா இலக்கியங் களில் ஞானசம்பந்தரைப் பற்றிய குறிப்புகள் தென்படு கின்றன.

### 4-8-1 சங்கரலிங்கன் உலா :

பதினேழாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் இவ் வுலா, சம்பந்தரின் பாடல் சிறப்பினையும் இவர்தம் அருட் செயல்களையும் எடுத்துரைக்கின்றது.

''பொன் இசைய மேவும் புகலியர்கோன்
பாட்டிசையும்''[32]

என்ற அடியும்,

'தென்புகலி வேந்து செழியன் உடல் கூன்நிமிர
முன்புகலும் செஞ்சொல் முதுதமிழும்''[33]

போன்ற அடிகளும் ஞானசம்பந்தர் தந்தையின் யாகத்திற்காக இறைவனிடம் வேண்டிப் பொற்கிழி பெற்ற வரலாற்றையும், பாண்டியனின் கூன்நிமிரச் செய்த வரலாற்றையும் எடுத்துரைக்கின்றன.

## 4-8-2 திருவிடைமருதூர் உலா :

ஞானசம்பந்தர் அனல்வாதம், புனல்வாதம் செய்து சமணரைத் தமிழ்ப் பாசுரங்களின் வாயிலாக வென்ற திறத்தை மீனாட்சி சுந்தரம்பிள்ளையின் திருவிடைமருதூர் உலாவின் வாயிலாக அறிய,

''நீரும் நெருப்பும் நிரம்பு தமிழ்ப் பெருமை
ஓரும்படி அருள்கொள் ஒண் மழுவும்''[34]

போன்ற அடிகள் துணைபுரிகின்றன. மேலும் இந்நூலாசிரியர் 'திருஞான சம்பந்தர் பதிற்றுப்பத்தந்தாதி' என்ற பிரபந்தத்தையும் பாடியுள்ளார்.

பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் 'குற்றாலநாதர் உலா', 'தேவை உலா' 'திரு இலஞ்சி முருகன் உலா' போன்ற நூல்களும் சம்பந்தரின் புகழைப் பாடுகின்றன.

## 4-9 ஞானசம்பந்தரைப்பற்றிச் சௌந்தர்யலகரி :

ஞானசம்பந்தரைப்பற்றி 9-ம் நூற்றாண்டினராகிய ஆதிசங்கரரும் குறிப்பிட்டுள்ளார். தாம் அருளிச் செய்த சௌந்தர்யலகரியின் 75-ஆம் சுலோகத்தில்,

'மலைமகளே' உன் திருமுலைப்பாலை இதயத்திலிருந்து வெளிப்படும் அமுதவெல்லம் போலவும், நாயகளே பால் வடிவில் வந்தது போலவும் நான் நினைக்கின்றேன். ஏனெனில் நீ கருணையால் ஈந்த அப்பாலைப் பருகித் தமிழ்ச்சிறுவன் கவிகளுக்குள் மேதக்கவனாகிவிட்டான்'[35]

என்ற பொருளமைத்து ஞானசம்பந்தரின் அருட்கவிகளை வியந்து பேசுகிறார்.

15-ம் நூற்றாண்டினராகிய வீரைக் கவிராச பண்டிதர் தாம் இயற்றிய சௌந்தர்யலகரி தமிழாக்கத்தில்,

''தருண மங்கலை உனது சிந்தை
தழைத்த பாலமுது ஊறினால்
அருண கொங்கையில் அது பெருங்கவி
அலைநெ டுங்கடல் ஆகுமோ?
வருணம் நன்குறு கவுணி யன்சிறு
மதலை அம்பயல் பருகியே
பொருள்ந யம்பெறு கவிதை என்று
ஒரு புனித மாரிபொ ழிந்ததே''[36]

எனச் சம்பந்தர் ஞானப்பாலுண்டு கவிமழை பொழிந்த திறத்தைச் சந்த இசையில் குறிப்பிட்டுள்ளதாகத் 'தேவார ஆய்வுத்துணை' என்ற நூலின் முன்னுரை குறிப்பிடும்.

## 4-10 தமிழ்க் கீர்த்தனைகளில் ஞானசம்பந்தர் :

சம்பந்தரைப் பாடுபொருளாகக் கொண்டு பிற்கால கீர்த்தனைகள் பாடப்பட்டுள்ளன. கீர்த்தனைகள் என்பன பொதுவாக இறைவனைப் பற்றியே பாடுவன. கீர்த்தனை இயற்றுவோரும் ஞானசம்பந்தரை முருகப்பெருமானின் திருஅவதாரம் என்று எண்ணும் கொள்கையுடையவராகவே காணப்பெறுகின்றனர்.

### 4-10-1 குன்றக்குடி குமரன் பேரில் கீர்த்தனைகள் :

அழகிய சிற்றம்பலக்கவிராயர் என்பவர் மல்லையூர் எனும் ஊரில் வாழ்ந்தவராவார். இவரது காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு ஆகும். 'குன்றக்குடி குமரன்பேரில் கீர்த்தனைகள்' எனும் நூல் இவரால் இயற்றப்பட்டதெனக் கருதுவர். இக்கீர்த்தனை நூலில் 2893 கீர்த்தனைகள் காணப்படுகின்றன. இவர் சிறந்த முருகபக்தராதலால் ஞானசம்பந்தரை முருகனின் அவதாரமெனக் கருதும் கருத்துடையவராக விளங்கினார் என்பது ஒரு கீர்த்தனை வாயிலாகத் தெரியவருகிறது. பாடலின் பல்லவியில் முருகப் பெருமானை,

''சம்பந்தமூர்த்தியாகவே யவதாரஞ்செய்தோரே''[37] என்று குறிப்பிட்டுள்ளார். பாடலின் அனுபல்லவி ஞான சம்பந்தர் அடியவர்களைக் காப்பவன் என்றும், சீர்காழிப் பதியிலே உறைபவன் என்றும் தெரிவிப்பதுடன் 'சரணப் பகுதி'யில் எண்ணாயிரம் சமணரைக் கழுவிலேற்றியவன் என்ற கருத்தையும் தெரிவிக்கிறது. இக்கருத்தமைந்த அடிகள்,

'எண்ணாயிரவர் சமணரும் வாதினி லெல்லாரும்
கழுவி லேறவே - திவ்விய
பண்ணாருந்திருத் தேவாரத் தமிழ்ப்பதிகப்பாடல் மீறவே'[38]

என்பதாகும்.

## 4.10-2 இரிஷிவிந்தக் குறவஞ்சி :

இது 19ஆம் நூற்றாண்டில் எழுதி அரங்கேற்றப்பெற்ற நூலாகும். திருவெண்ணெய்நல்லூரைச் சேர்ந்த இராசப்ப உபாத்தியாயர் என்பவரே இதன் ஆசிரியர். இரிஷிவிந்தம் எனும் தலம் தென்னாற்காடு மாவட்டத்தைச் சார்ந்த தாகும். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அர்த்தநாரீசுவரன் நூற்றலைவனாகவும், வசந்தமோகினி தலைவியாகவும் படைக்கப்பட்டுள்ளனர்.

இந்நூலில் சைவத்தைப் போற்றும் நிலையில் பல பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இதில் ஒரு பாடல், ஞான சம்பந்தர் புனல்வாதத்தில் அமணர்களைத் தோற்கடித்து ஓடச்செய்த நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அப்பாடல் வருமாறு :

''நாடு சம்பந்தர் வாதாடி நீதிலிடு
மேடெதிரேறிட வோடுஞ் சமணர்போல்
துப்புறழ் வேணிய னொப்பறுமேனியன்''[39]

சைவ ஏற்றத்தையும் சமணத் தூற்றுதலையும் கொண்ட இப்பாடலை உசேனி இராகத்தில் இராசப்ப உபாத்தியாயர் பாடியுள்ளார்.

### 4-11 திருவருட்பா :

திருவருட்பாவில் இராமலிங்க அடிகளார் தமது சற்குருவாகிய ஞானசம்பந்தரை நினைந்து அவரது அருள்பெற விழைந்து பாடிய பாமாலை 'ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை' யாகும். இந்நூலில் சம்பந்தர் பிள்ளைப் பருவத்தில் ஞானப்பால் உண்ட செய்தி, உயிரனுபவம், அருளனுபவம், சிவானுபவம் என மூவகை அனுபவங்களோடு எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அப்பாடல்,

''உயிர்அனுபவம் உற்றிடில் அதனிடத்தே
    ஓங்கருள் அனுபவம் உறும்அச
செயிரில்நல் அனுபவத்திலே சுத்த
    சிவஅனு பவம்உறும் என்றாய்
பயிலுமூ வாண்டில் சிவைதரு ஞானப்
    பால் மகிழ்ந் துண்டுமெய்ந் நெறியாம்
பயிர்தழைந் துறவைத் தருளிய ஞான
    பந்தன்என் றோங்குசற் குருவே''40

என்பதாம். ஞானசம்பந்தர் நடைபயின்று தூய மொழி பயிலும் பருவம் என்பதை விளக்கப் 'பயிலும் மூவாண்டு' என உரைக்கின்றார். உமைதந்தபால், ஞானம் குழைத்த பால் எனச் சேக்கிழார் முதலியோர் கூறுவதால் 'சிவைதரு ஞானப்பால்' என்கிறார் இந்நூலின் உரையாசிரியர் ஔவை துரைசாமி பிள்ளை.

திருஞானசம்பந்தர் திருவரத்துறையில் முத்துச்சிவிகை பெற்றதும் அப்போது சிவபெருமானைப் புகழ்ந்துரைத்ததும், பின் தமிழ்நாட்டில் சிவஞானப் பணிபுரிந்ததையும் எடுத்துரைக்கும் வண்ணம்,

''முத்தியற் சிவிகை இவர்ந்தருள் நெறியின்
    முதலரசி யற்றிய துரையே''41

என்று வள்ளலார் குறிப்பிட்டுள்ளார். ஞானசம்பந்தர் புறச் சமயத்திலிருந்து சைவத்தைக் காப்பாற்றுவதற்கும், சைவம் தழைப்பதற்கும் பாடுபட்டவராவார். சைவத்தின்

பெருமையை உணராத சமணர்களின் இருள்நீங்கத் தீபமென எழுந்தவர் சம்பந்தவராவார். இதனால் ஞானசம்பந்தரை,

''தெவ்வகை அமண இருளற எழுந்த
தீபமே சம்பந்தத் தேவே''[42]

என்று பெருமான் குறிப்பிடுகின்றார். மயிலாப்பூரில் பூம்பாவையை உயிர்ப்பித்து எழுப்பிய செய்தியை,

''என்பு பெண் ணுருவோ டின்னுயி ரதுகொண்
டெழுந்திடப் புரிந்துல கெல்லாம்''[43]

என்றும், நல்லூர்ப் பெருமணத்தில் சிவன் திருவடியைச் சம்பந்தர் தன் உறவினர்களோடு கலந்த செய்தியை,

''பெருமண நல்லூர்த் திருமணங் காணப்
பெற்றவர் தமையெலாம் ஞான
உருவடைந் தோங்கக் கருணைசெய் தளித்த
உயர்தனிக் கவுணிய மணியே''[44]

என்றும் புகழ்ந்தருள்கின்றார். அருள்மாலையில் தன் குருவாகிய, சம்பந்த்ரை 'ஓங்கு சற்குருவே', 'தெள்ளமுதாம் சிவகுருவே', 'உத்தம சுத்த சற்குருவே', சிவகுருவே', 'அருள்பெற்ற மணியே', 'என்உயிர் எனும் குருவே', உயர் தனிக் கவுணிய மணியே', 'சம்பந்தத் தேவே' என்று வள்ளலார் போற்றிப் பரவுகின்றார்.

## 4-12 குடம்கண்ட திருமுறை :

ஞானசம்பந்தரின் வரலாற்று நிகழ்ச்சிகளில் சில பிற்காலக் கவிதைகளிலும் இடம்பெற்றன. சான்றாக 'ஸ்ரீ சுப்ரமணிய பாரதி கவிதாமண்டலம்'

எனும் திங்கள் இதழ் சொ. சொ.மீ. சுந்தரம் அவர்கள் இயற்றிய 'குடம்கண்ட திருமுறை' எனும் கவிதையை வெளியிட்டுள்ளது. பூம்பாவையின்சாம்பலும், எலும்புகளும் அடைத்து வைக்கப்பட்டிருந்த குடமே பேசுவதாக இக்கவிதை அமைந்துள்ளது.

இக்கவிதையில் 'சொக்கநாதர் வணக்கம்', 'மீனாட்சி யம்மை வணக்கம்', இவற்றைத் தொடர்ந்து 'குடம் பேசுகிறது' என்ற தலைப்பில் பூம்பாவையின் தந்தையார் சிவனேசர் பற்றிய குறிப்புகளும், பூம்பாவையின் வளர்ப்பு' இறப்பு முதலியசெய்திகளும் இடம்பெற்றுள்ளன. இறுதியில் இறந்த பூம்பாவையின்சாம்பலை எடுத்துவைத்த நிகழ்ச்சியை

''இறந்துவிட்ட பெண்ணுடம்பை எரித்துவிட்டார்
எலும்போடு சாம்பலையும் எடுத்துவைத்தார்''[45]

என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார். சம்பந்தர் 'மட்டிட்ட புன்னை' என்ற பதிகம் பாடும்போது எட்டாவது பாடலிலேயே பூம்பாவை உயிர்த்து உருக்கொண்டு எழுந்த செய்தியை,

''மட்டிட்ட புன்னை' யெனும் பாடல் கேட்க
மட்குடம்நான் மதிமயங்கி வீற்றிருந்தேன்
தட்டின்றித் தேவாரம் பாடப் பாடச்
சாம்பலெலாம் என்னுள்ளே ஒன்றுசேர
எட்டாவ தாய்வந்த பாட்டி னாலே
என்னெஞ்சம் இன்பத்தால் எல்லைமீற
ஒட்டிவரும் ஒன்பதெனும் பாட்டைக் கேட்க
உடனேநான் மகிழ்வாலே வெடித்துவிட்டேன்'[46]

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## 4-13 வடநூல்கள் குறிப்பிடுவன :

17-ஆம் நூற்றாண்டினரான நீலகண்ட தீட்சிதர் இயற்றிய 'சிவலீலார்ணவத்தின்' 22-ஆம் சருக்கத்தில், அகஸ்திய சம்பந்தர் முருகன் அவதாரமாகக் குறிப்பிடப்பட்டுள்ளார். பக்தவிலாசம்', 'உபமந்யு', 'பக்தவிலாசம்', 'ஹாலாஸ்ய மாஹாத்மியம்' போன்ற நூல்களும் சம்பந்தரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளன. 'சிவரஹஸ்யம்' அத்தியாயம் 46இல் சம்பந்தருடைய சரித்திரம் விளக்கப்பட்டுள்ளது''[47]

**முடிவுரை :**

இதுவரை கூறியவற்றால் ஞானசம்பந்தரைப் பற்றிய முழுமையான வரலாற்றைப் பெரியபுராணத்திற்கு அடுத்து

எந்நூலும் விரிவாக்க நிலையில் குறிப்பிடவில்லை என்பது தெரியவருகின்றது. இலக்கியங்கள் ஞானசம்பந்தரைப் பற்றி இரண்டு நிலைகளின்கீழ் விளக்கியுள்ளன.

1) ஞானசம்பந்தரின் அருட்செயல்களை மட்டும் விளக்கியுரைப்பது.

2) ஞானசம்பந்தரை உயர்நிலைப்படுத்த முருகனின் அவதாரம் என்று கூறுவது.

பெரியபுராணத்தில் சேக்கிழார் கூறாமல்விடுத்த 'பாலையை நெய்தலாக்கிய' செய்தியைப் பிற்கால நூல்களும் குறிப்பிட்டுள்ளன. ஞானப்பால்உண்ட நிகழ்ச்சியையேபெரும்பாலான இலக்கியங்கள் கையாண்டுள்ளன.

தமிழ் இலக்கியங்களில் தக்கயாகப்பரணி சம்பந்தரை முருகப் பெருமானின் அவதாரம் என்று கூறியதை ஏற்றுக் கொண்டு திருப்புகழ், ஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் போன்ற இலக்கியங்களும் சம்பந்தரை முருகப்பெருமானின் அவதாரமெனச் சுட்டுகின்றன. சைவ ஆகமங்கள், வட நூல்கள் போன்றவற்றைத் தொடர்ந்து, தற்காலக்கவிதைகளும் ஞானசம்பந்தரைப் பாடுபொருளாகக் கொண்டுள்ளன என்பது தெரியவருகிறது.



## குறிப்புகள் :

1. உய்யவந்த தேவநாயனார், திருக்களிற்றுப்படியார், பா. 12.
2. மேலது., பா. 54.
3. மேலது., பா. 65.
4. மேலது., பா. 70.
5. ஒட்டக்கூத்தர், தக்கயாகப்பரணி, பா. 7.
6. மேலது., பா. 170.
7. மேலது., பா. 172.
8. மேலது., தா. எ. 170.
9. மேலது., தா. எ. 170.
10. மேலது., தா. எ. 172.
11. மேலது., தா. எண்கள். 173, 174.
12. மேலது., தா. எ. 178.
13. மேலது., தா. எ. 179
14. மேலது., தா. எ. 180
15. மேலது., தா. எ. 183
16. மேலது., தா. எ. 194
17. மேலது., தா. எ. 211
18. சிவப்பிரகாச சுவாமிகள், நால்வர் நான்மணிமாலை பா. 5
19. மேலது., பா. 10
20. மேலது., பா. 13
21. மேலது., பா. 37
22. குமாரபாரதி, திருத்தொண்டர்மாலை, ப. 8
23. மேலது., ப. 8
24. மேலது., ப. 8
25. திருப்புகழ், பா. 261
26. மேலது., பா. 245
27. குமரகுருபரர் பிரபந்தத்திரட்டு, மதுரைக்கலம்பக பா. 66

28 மேலது., பா. 169
29 குமரகுருபரர் பிரபந்தத்திரட்டு, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. 43
30 கு. முத்துராசன், பிள்ளைத்தமிழ் இலக்கியம், ப. 194
31 திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் ஆராய்ச்சிக்குறிப்பு, பக். 13-14
32. சங்கரலிங்கன் உலா, கண்ணி 269, மேற்கோள்-தேவாரம் ஆய்வுத்துணை-3, ப. 30
33. மேலது., கண்ணி 278, மேற்கோள்-தேவாரம் ஆய்வுத்துணை-3, ப. 27
34. திருவிடைமருதூர் உலா, கண்ணி 203, மேற்கோள்-தேவாரம் ஆய்வுத்துணை-3, ப. 30
35. தேவாரம் ஆய்வுத்துணை-3, ப. 44
36. மேலது., பக். 25-26
37. சௌந்தரபாண்டியன், தமிழில் கீர்த்தனை இலக்கியம், ப. 100
38. மேலது; ப . 100
39. மேலது; ப. 260
40. திருஅருட்பா, ஐந்தாம் திருமுறை, பா 3227
41. மேலது; பா. 3231
42. மேலது; பா. 3233
43. மேலது; பா. 3234
44. மேலது; பா. 3235
45. சொ. சொ. மீ. சுந்தரம், பாரதி கவிதாமண்டலம் (1-03-80) குடம்கண்ட திருமுறை, ப. 17
46. மேலது, பா 12., ப. 18
47. தேவாரம் ஆய்வுத்துணை-3, ப. 45

'வல்லார் பிறப்பறுப்பர் வண்மைநலம் கல்கி
நல்லாதரவு இன்ப ஞானங்கள் - எல்லாம்
திருஞான சம்பந்தன் சேவடியே என்னும்
ஒருஞானசம் பந்தம் உற்று.

-நால்வர் நான்மணிமாலை

# திருஞானசம்பந்தரின் விழாக்களும் திருமேனிகளும்

## 5-0 முன்னுரை :

'தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடிபூசி என்உள்ளம்கவர் கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த அருள்செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன்அன்றே'[1]

தேவாரம் பாடிய நாயன்மார் மூவரில், ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டு பாடியபாடல் இது. மூன்று வயதிலேயே செந்தமிழ்ப் பாக்களைப் பாடிய இவர் தமது பதினாறாம் வயதிற்குள் சைவசமய வரலாற்றில்பெரும் முன்னேற்றத்தை ஏற்படுத்தியராவார். இத்தகு சிறப்புப் பொருந்திய நாயன்மாருக்கு அவர் பிறந்த ஊரிலேயே கோயில் எழுப்பி விழாக்களும் நடத்தப்பட்டு வருகின்றன. ஞானசம்பந்தர் பிறந்த தலமான 'சீகாழிப்பதியில் இறைவன் அம்மையுடன் காட்சிக்கொடுத்து ஞானப்பால் ஊட்டியதனால் இங்குத் 'திருமுலைப்பால் உற்சவம்' சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்நாளிலேயே திருக்கோலக்காவில் இறைவனிடமிருந்து சம்பந்தர் பொற்றாளம் பெறும் நிகழ்ச்சியும் விழாவாகக் கொண்டாடப்படுகின்றது. இன்றைய நிலையில் திருமுறைகளுக்கும் நாயன்மார்களுக்கும் சிறப்புச் செய்யும் நிலையில் 'திருமுறை முற்றோதல்' நிகழ்ச்சி விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. விழாக்களத்தில் நோக்கப் பெற்ற இவ்விரு விழாக்களும் இப்பகுதியில் விரிவாகப் பேசப்பெறுகின்றன.

ஞானசம்பந்தர் திருமணம் செய்துகொண்டு ஆச்சாள் புரக்கோயிலில் சோதியில் கலந்ததாக வரலாறு காட்டும். இந்நிகழ்ச்சியும் விழாவாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஞானசம்பந்தர் பற்றிய இவ்விழா, 'சேக்கிழார் அடிச் சுவட்டில்' மற்றும் பிற நூல்களின் துணைகொண்டு விளக்கப்படுகிறது.

## 5-1 திருமுலைப்பால் உற்சவம்

சீகாழி பிரமபுரீசுவரர் கோயிலில் சித்திரை மாதந் தோறும் நிகழும் விழாவில் இரண்டாம் திருநாள் திரு முலைப்பால் உற்சவமாகும். இந்நிகழ்ச்சி ஆண்டுதோறும் நண்பகலிலேயே நடைபெற்றுவருகிறது. இந்நிகழ்ச்சியை

1) ஞானசம்பந்தர் எழுந்தருளல்
2) திருமுலைநாயகி பால் கொடுத்தல்
3) தோணியப்பர் அம்மையுடன் காட்சிதருதல்
4) ஞானசம்பந்தர் புராணம் ஓதுதல்
5) பால் வழங்குதல்

போன்ற நிலைகளில் பிரித்துக்கொள்ளலாம்.

### 5-1-1 ஞானசம்பந்தர் எழுந்தருளல்

பிரம்மபுரீசுவரர் கோயில் திருக்குளத்தில் ஞானப் பாலுண்டு ஞானம் பெற்ற சம்பந்தரின் அருட்செயலின் நினைவாக வளைவு ஒன்று கட்டப்பட்டுள்ளது. இவ் விடத்தில் போடப்பட்டுள்ள பந்தலின்கீழ் நிகழ்ச்சி நடை பெற்றுவருகின்றது. வண்ணத் துணிகளாலும், மலர் களாலும் அலங்கரிக்கப்பட்ட பல்லக்கு ஒன்றில் ஞானசம்பந் தரின் செப்புத் திருமேனி நன்கு அலங்கரிக்கப்பட்டு இப் பந்தலின்கீழ் நிறுத்தப்படுகின்றது. பல்வேறு இசைக் கருவிகள் முழங்க எழுந்தருளச் செய்யப்பெறும் ஞான சம்பந்தரின் திருமேனிக்குக் கற்பூர வழிபாடும் செய்யப் படுகின்றது.

## 5·1-2 திருமுலைநாயகி பால் கொடுத்தல்

ஞானசம்பந்தர் பல்லக்கில் வந்து நின்றபின் திருமுலை நாயகியின் திருவுருவமும் நன்கு அலங்கரிக்கப்பட்டு எழுந்தருளச் செய்யப்படுகின்றது. அதாவது ஞானசம்பந்தரின் தந்தையாராகிய சிவபாத இருதயர் திருக்குளத்தில் மூழ்கிய போது 'அம்மே அப்பா' என்றழுத பிள்ளையாருக்குமுன் அம்மையார் தோன்றியதை இங்கு நினைவுகூரவேண்டும்.

ஞானசம்பந்தருக்கு அருகில் வந்து நின்ற திருமுலை நாயகியின் கையில் பால் நிரம்பப்பெற்ற பொற்குடம் ஒன்று காணப்படுகிறது. இக்குடத்திலுள்ள பாலைச் சிறிய பொற்கிண்ணம் ஒன்றில் எடுத்து அதனைச் சம்பந்தரின் இதழில் சிறிது ஊற்றிப் பின் அவரது கையில் இக்கிண்ணத்தை வைத்துத் தீபவழிபாடு செய்கின்றனர். சேக்கிழார் இதனை,

> '' வாரிணங்கு திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி
> எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
> '' உண்ணடிசில்'' எனஊட்ட உமையம்மை
> எதிர்நோக்கும்
> கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற்
> கிண்ணமளித்
> தண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணனார்
> அருள்புரிந்தார்''[2]

என்று அழுத பிள்ளைக்குத் திருமுலைப்பால் ஊட்டிய நிகழ்ச்சியினை அழகாக விளக்கியுள்ளார். ஞானப்பாலை ஊட்டியபின் திருமுலைநாயகியின் திருமேனி மண்டபத்திற்குள் அழைத்துச் செல்லப்படுகிறது.

## 5-1-3 தோணியப்பர் அம்மையுடன் காட்சிதருதல்:

திருமுலைநாயகியின் திருமேனியை அழைத்துச்சென்ற பின் ஞானசம்பந்தர் பால்வடியும் வாயுடன் நின்றிருக்கும் நேரத்தில் இவரது பல்லக்கிற்கு எதிர்ப்புறத்தில் அலங்

கரிக்கப்பட்ட அம்மையும் அப்பனும் விடையின்மீது ஞான சம்பந்தருக்குக் காட்சி தருகின்றனர். இவர்களுடன் மீண்டும் திருமுலைநாயகியும் காட்சி தருகிறார். இந் நிலையில் மூவருக்கும் தீபவழிபாடு செய்யப்படுகின்றது.

ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டபின் சிவபாத இருதயர் சிறு கோல்கொண்டு அச்சுறுத்த அப்போது விடையின்மீது அம்மையும் அப்பனும் மட்டுமே காட்சி தருகின்றனர். ஆனால் இவ்விழாவில் திருமுலைப்பாலை வள்ளத்தில் கறந்து ஊட்டியதனால் சிறப்புப் பெற்ற திருமுலைநாயகி அம்மையாரையும் உடன்வைத்து வழிபாடு செய்துவருகின்றனர்.

## 5-1-4 ஞானசம்பந்தர் புராணம் ஓதுதல்

ஞானசம்பந்தருக்கு இறைவன் காட்சி தந்தபின் ஞான சம்பந்தர் புராணம் ஓதப்படுகின்றது. இவர் சீகாழியில் தோன்றியது முதல் ஞானப்பால் உண்டது வரையிலான செய்திகள் பெரியபுராணத்தின் வாயிலாக எடுத்தோதப் படுகின்றன. ஞானசம்பந்தரைப்பற்றி அறியாதவர்களுக்கு அறியக்கூடிய வாய்ப்பு இவ்விழாவின்மூலம் கிட்டுகின்றது. புராணம் ஓதியபின் மீண்டும் தீப வழிபாடு நடத்தப் பெறுகின்றது.

## 5-1-5 பால் வழங்குதல்

இப்படியாக வழிபாடு நடந்தேறியபின் பொதுமக்கள் தாங்கள் கொண்டுவந்த பாலை இறைவனுக்கு அளிக்கின்றனர். ஞானசம்பந்தரின் திருவடியிலோ அல்லது அம்மையப்பரின் திருவடியிலோ வைத்து வழிபாடு செய்யப் பெற்ற பாலைத் தாங்கள் அருந்துவதோடு மற்றவருக்கும் அளித்து மகிழ்கின்றனர் 'திருமுலைப்பாலுண்டார் மறுமுலை பால் உண்ணார்' என்னும் மொழி இவ்விழாவின் சிறப்பை உணர்த்துவதாகும். இறைவியின் திருமுலைப்பால் உண்டவர்க்கு மறுபிறவி இல்லை என்பது இதன்மூலம் உணர்த்தப் படுகின்றது.

பால் வழங்கும் நிகழ்ச்சி நடந்தேறியபின் திருஞான சம்பந்தரின் பல்லக்கு அம்மையப்பர் திருவுருவத்தை மூன்று முறை வலம் வருகின்றது. இப்படி வலம் வந்தபின் ஞான சம்பந்தர் திருமேனி மண்டபத்தை நோக்கிப் புறப்படு கின்றது.

## 5-2 தானப் பொருட்கள்

இவ்விழா நாளின்போது இறைவனைக் காணும் பொருட்டு வந்த அடியார்கள் அனைவருக்கும் நீர், மோர், பால், அன்னம் முதலியவை தானமாக வழங்கப்படுகின்றன. இவ்வாறாக நடத்தப்பெறும் இவ்விழா நண்பகல் சுமார் இரண்டு மணியளவில் நிறைவுபெறுகின்றது. இதனைத் தொடர்ந்து அன்று மாலை பொற்றாளம் பெறும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது.

## 5-3 திருமுறை மாநாடு

ஞானசம்பந்தர் விழாவின்போது விரிவுரைகள், கருத் தரங்குகள், பட்டிமன்றம், கவியரங்கம், வழக்காடுமன்றம், கலந்துரையாடல் போன்றவை நடைபெறுகின்றன. இவற் றில் ஞானசம்பந்தரைப்பற்றியே பெரிதும் பேசப்படுகின்றது. மேலும் இவ்விழாவின்போது சிறந்த ஆன்றோர்களுக்குத் ''திருமுறைக் கலாநிதி'' பட்டமும் அளிக்கப்பெற்று வருகின்றது.

## 5-4 பொற்றாளம் பெறும் விழா

சீகாழியில் ஞானப்பாலுண்ட ஞானசம்பந்தர் பின் திருக்கோலக்காவை அடைகின்றார். அங்கு 'மடையில் வாளை' எனத் தொடங்கும் பதிகத்தைக் கையினால் தாள மிட்டுப் பாடுகின்றார். இதனைக் கண்ட இறைவர் பிஞ்சுக் கைகள் தாங்கமாட்டாதென்று கருதி ஐந்தெழுத்துப் பதித்த பொற்றாளத்தைக் கொடுக்கிறார். பொற்றாளம் ஓசை யெழுப்பாது என்பதால் அம்மையார் இதற்கு ஓசை கொடுக் கின்றார். இதன் காரணமாக இத்தலத்தில் எழுந்தருளி

யுள்ள இறைவனின் பெயர் 'திருத்தாளமுடையார்'. ஓசை கொடுத்ததினால் அம்மை 'ஓசை கொடுத்த நாயகி' என்றழைக்கப் பெறுகின்றாள்.

சீகாழியில் ஞானப்பால் உற்சவத்தில் கலந்துகொண்ட ஞானசம்பந்தரின் செப்புத் திருமேனி பல்லக்குடன் திருக்கோலாக்காவை அடைகின்றது. திருக்கோயிலினுள் ஞானசம்பந்தர் எழுந்தருளியபின் 'மடையில்வாளை' எனத் தொடங்கும் பதிகப் பாடல்கள் பதினொன்றையும் ஓதுவார்கள் இசையுடன் ஓதுகின்றனர். பிறகு தேவாரம், திருவாசகம், திருப்பல்லாண்டு, திருவிசைப்பா, பெரிய புராணம் ஆகியவற்றை உள்ளடக்கிய 'பஞ்சபுராணத்தை' ஓதி இறுதியில் 'நாளும் இன்னிசையால்' என்று தொடங்கும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடலைப் பாடி நிறைவு செய்கின்றனர். பொற்றாளத்தில் ஓசையெழுப்பிய பின்னர் ஞானசம்பந்தரின் திருக்கரத்தில் தாளம் பொருத்தப்படுகின்றது. மறுதினம் அதிகாலையில் மலர்களால் அலங்கரிக்கப்பெற்ற பல்லக்கில் ஞானசம்பந்தர் திருமேனி மீண்டும் சீகாழியை அடைகின்றது.

## 5-4-1 திருக்கோலக்கா

### திருத்தல வரலாறு கூறுவது

திருஞானசம்பந்தருக்குப் பூசை செய்துவரும் ஒரு குருக்கள் கூறியவற்றிலிருந்து சில செய்திகள் புலப்பட்டன. இச்செய்தி 'திருக்கோலக்கா திருத்தல வரலாற்றிலும் காணக்கிடக்கிறது. அது பின்வருமாறு;

''நாகர்கோவிலைச் சேர்ந்த ஓர் அன்பரின் ஆண் குழந்தை தன் ஏழாவது பிராயம்வரையில் பேசும் திறனைப் பெற்றிருக்கவில்லை. திருக்கோலக்காவைப் பற்றியும் ஓசை கொடுத்த நாயகியைப்பற்றியும் அன்பர்கள்மூலம் கேள்வியுற்றிருந்த அவர் குழந்தை பேச ஆரம்பித்தால் அன்னைக்கு ஐந்து பவுனில் பொற்றாளம் சமர்ப்பிப்பதாகப் பிராத்தனை

செய்துகொண்டு அன்னையின் அருளுக்காகவே ஏங்கிக் கிடக்க, அக்குழந்தைக்கும் பேச்சுத்திறன் வரவே, அம் மகனுடன் திருக்கோலக்கா வந்து இறைவனையும் உடன் அம்மனையும் போற்றித் துதித்துப் பொற்றாளமும் காணிக்கையாக அளித்துள்ளார். இதில் விசேஷம் என்ன வென்றால் அதுவரை பேசாமலிருந்து பின் அன்னையி னருளால் பேச்சுப்பெற்ற பாலகன், இத்திருக்கோயிலில் பாடியது தேவாரப் பதிகங்கள்''[3] ஆகும்.

இச்செய்தியைப்பற்றிக் குறிப்பிட்டபோது, 1979-ஆம் ஆண்டு வைகாசி மாதம் இத்தாளத்தை இறைவனுக்காக இவ்வன்பர் கொடுத்தார் என்றும், இதற்குப் பிறகே இக் கோவிலில் ஞானசம்பந்தரையும் இறைவனையும் வந்து வழிபடும் அடியார்களின் திருக்கூட்டம் பெருகிற்று என்றும் குறிப்பிட்டார். 'ஓம்' என்ற பிரணவ மந்திரம் பொறிக்கப் பட்ட அப்பொற்றாளமே இன்றும் விழாவில் பயன் படுத்தப்பட்டு வருகிறது.

## 5-5 நல்லூர்ப் பெருமண விழா

சிதம்பரத்திற்கும் சீர்காழிக்குமிடையே கொள்ளிடத் திலிருந்து மூன்று மைல் தூரத்திலிருக்கும் ஆச்சாள்புரம் என்பதே, அன்றைய திருமண நல்லூர் என்ற ஊராகும் கோயிலின் பெயர் நல்லூர்ப் பெருமணமாகும். இக் கோயிலில் வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் இவ் விழா ஆரம்பிக்கப்படுகிறது. நான்காவது நாள் ஞான சம்பந்தர் சோதியில் கலந்ததை விழாவாகக் கொண்டாடி வருகின்றனர்.

சோ. சிவபாத சுந்தரம் அவர்கள் 'சேக்கிழார் அடிச் சுவட்டில்' என்ற தம் நூலில் பெருமண நிகழ்ச்சி குறித்து குறிப்பிட்டுள்ளார். இந்நிகழ்ச்சி கீழ்கண்டவாறு நிகழ்கிறது.

### 5-5-1 பாலசம்பந்தரும் கல்யாணசம்பந்தரும்

இத்திருக்கோயிலில் இரண்டு உற்சவமூர்த்திகள் காணப் படுகின்றனர். திருமணத்திற்கு முன்பு பாலசம்பந்தர் என்று

அழைக்கப்பெறும் உற்சவமூர்த்திக்கும், திருமண நிகழ்ச்சியிலிருந்து கல்யாணசம்பந்தர் என்றழைக்கப்பெறும் உற்சவமூர்த்திக்கும் வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. திருமணத்திற்கு முன்னாள் பாலசம்பந்தருக்கு வடக்கு வீதியிலுள்ள ஒரு மடத்தில் சமாராதனை நடைபெறுகிறது. இம்மடத்திற்கு அருகிலுள்ள மற்றொரு மடத்திலே நம்பாண்டாரும், சொக்கியாரும் குடியிருப்பதாக நம்பிக்கை.

## 5-5-2 மாப்பிள்ளை, பெண் அழைப்பு

வேதங்கள் தேவாரப்பதிகங்களை ஓதிய வண்ணம் ஞானசம்பந்தரும் சொக்கியாரும் வீதிஉலா வருகின்றனர். கோயிலுக்குள் வரும்பொழுது இருவரும் குருக்களின் வாயிலாக மாலை மாற்றிக்கொள்கின்றனர். இதற்குப்பின் ஊஞ்சல் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. இச்சமயத்தில் ஓதுவார்களால் தேவாரப் பதிகங்கள் இசையுடன் பாடப்படுகின்றன.

## 5-5-2 திருமணமும் சோதியிற்கலத்தலும்

இதுவரை நடைபெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தும் பாலசம்பந்தருக்கே நடைபெறுகின்றன. திருமணச் சடங்கின் போது கல்யாணசம்பந்தரை வைத்தே திருக்கல்யாணம் நடத்தப்பெறுகின்றது. சடங்குகள் முடிந்து விடியற்காலை நான்கிலிருந்து ஐந்து மணிக்குள் கோயில் மூலவருக்கு அபிடேகம் செய்து 'காதலாகிக் கசிந்து' என்று தொடங்கும் பதிகத்தின் பாடல்கள் ஐந்தினைப் பாடிமுடிப்பர். இறுதியிலுள்ள ஐந்து பாடல்களில் சோதியில் கலக்கும் சடங்கினை செய்துமுடிக்கின்றனர். கருவறையிலுள்ள ஐந்து படிகளிலும் சம்பந்தர் மணப்பெண்ணுடன் ஏறிச்செல்லும்போது படிக்கு ஒன்றாக ஐந்து பாடல்கள் பாடப்படுகின்றன. பின் கருவறையில் ஏராளமான கற்பூரத்தை வைத்துத் தீபவழிபாடு செய்யப்படுகிறது. சம்பந்தரை இவ்விடத்தில் கொண்டு சேர்த்துச் சோதியில் கலந்துவிட்டதாகக் கூறுவர். புரா

ணத்தில் இவருடன் பல அடியார்கள் சோதியில் கலந்ததாகச் செய்தி உண்டு. ஆனால் இதன்படி இங்கு எச்சடங்கும் செய்யப்படுவதில்லை.

## 5-6 திருமயிலை கபாலீசுவரர் கோயிலில் ஞானசம்பந்தர் விழா

கபாலீசுவரர் கோயிலில் ஆண்டுதோறும் வைகாசித் திங்களில் பத்து நாட்களுக்கு ஞானசம்பந்தருக்குத் திருவிழா நடைபெறுகிறது.

| | | |
|---|---|---|
| ''முதல் நாள் | .... | தாலாட்டு உற்சவம் |
| இரண்டாம் நாள் | .... | வளர்பருவ ஐதீகம் |
| மூன்றாம் நாள் | .... | ஞானப்பால் உண்ணுதல் பொற்றாளம் பெறுதல் |
| நான்காம் நாள் | .... | முத்துச் சிவிகை பெறுதல் முயலகன் நோய் தீர்த்தல் |
| ஐந்தாம் நாள் | .... | சுரப்பிணி தீர்த்தல் முத்துப்பந்தல் பெறுதல் |
| ஆறாம் நாள் | .... | விடம் தீர்த்தல் படிக்காசு பெறுதல் |
| ஏழாம் நாள் | .... | வெப்புநோய் தணித்தல் அனல், புனல்வாதம் |
| எட்டாம் நாள் | .... | ஓடம் உய்த்தல் ஆண்பனையைப்பெண் பனையாக்குதல் |
| ஒன்பதாம் நாள் | .... | பூம்பாவை உயிர்த்தெழல் |
| பத்தாம் நாள் | .... | திருக்கல்யாணமும் சோதியில் கலத்தலும்''[4] |

இவ்வாறு பத்துநாள்கள் நடைபெறும் நிகழ்ச்சியினை சு. இராசசேகரன் தமது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

## 5-7 திருவதிகையில் ஞானசம்பந்தர் விழா

நாயன்மார்கள் பலரால் புகழ்ந்து பாடப்பெற்ற தலம் திருவதிகையாகும். அப்பரை 'நாவுக்கரசே' என்று அழைத்ததும் இவர்தம் சூலை நோயைப் போக்கிஅருள் புரிந்ததும் இத்தலத்து இறைவனே. ''ஞானசம்பந்தர் பல தலங்களையும் வணங்கியபின் திருவீரட்டானம் அடைந்த போது அங்கு இறைவனின் திருநடனக் காட்சியைக் கண்டு களிக்கின்றார். அப்போது ''குண்டைக்குறட்பூதம்'' எனும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். இந்நிகழ்ச்சியை இன்றும் இவ்வூர் ஆலயத்தின் ஆனி உத்திரத்தன்று திரு ஞானசம்பந்தருக்குத் திருநடனக் காட்சியளித்த விழா நடைபெற்றுவருகின்றது'' என்று திருவதிகைத் தலவரலாறு கூறுகின்றது.[5]

## 5-8 திருமுறை முற்றோதல்

சைவ சமயம் தழைத்தோங்கும் பொருட்டு, தில்லை அம்பலவாணனையே நாளும் நினைவாகக் கொண்டு பல் வேறு அருட்செயல்களைப் புரிந்த அடியார்களையும் அவர் தம் பதிகங்களையும் ஏற்றிப்போற்றும் ஒரு விழாவே திரு முறை முற்றோதல் எனப்பெறும். சமயங்களை வளர்த்த அடியார்களுக்குரிய விழாவினை கோயில்தொறும் எடுக்கும் நிலைமாறி இல்லந்தோறும் எடுக்கும் நிலை இன்று புதிய தாகத் தோன்றியுள்ளது. புதுவையில் நடைபெற்ற பதி னாறாவது திருமுறை முற்றோதல் நிகழ்ச்சியில் ஞானசம் பந்தரைச் சிறப்புச் செய்யும் நோக்கோடு ஞானசம்பந்தரின் தேவாரப் பதிகங்களே சிறப்புச் செய்யப்பெற்றன.

### 5-8-1 திருமுறை முற்றோதல் - தோற்றுவாய்

சிவபெருமானுக்கு மிக உகந்ததும், திருஞானசம்பந்தர் அவதரித்ததுமான நாள் திருவாதிரைத் திருநாளாகும். முதல் திருப்பதிகம் தோன்றியதும் பன்னிரண்டாம் திரு முறை தொடங்கி நிறைவு பெற்றதும் இந்நாளேயாகும். இந்நாளில் மயிலம் முருகப்பெருமான் திருவருளாலும்,

மயிலம் பொம்மபுர ஆதீனகுரு முதல்வர் ஸ்ரீ பாலசித்தர் குருவருளாலும் பொம்மபுர ஆதீனம் 19-ஆம் பட்டம் குரு சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அவர்களின் அருளாசியாலும் முதன்முதலாகத் திருமுறை முற்றோதல் தமிழகத்தில் தொடங்கப்பட்டது. 94, முத்தைய முதலியார் வீதியிலுள்ள தண்டபாணி முதலியார் இல்லத்தில் இம்முற்றோதல் நடைபெற்றது. அந்நிகழ்ச்சியைப் பின்வருமாறு சுருக்கமாகக் கூறலாம்.

## 5-8-2 வழிபாட்டு நிலைகள்

'திருமுறை முற்றோதல்' என்பது இன்னார்தாம் ஏற்றுச்செய்தல் வேண்டும் என்ற நிலையின்றிச் சைவ நெறியில் பற்று கொண்ட அல்லது, சிவனடியார்களையும் திருமுறைகளையும் வணங்கிப் போற்றுகின்ற யாவரும் இவ்விழாவை ஏற்றுநடத்தலாம். இவ்விழாவில் நடைபெறும் நிகழ்ச்சிகளைப் பொதுவாக,

1) திருமுறை வீதியுலா
2) கொடியேற்றம்
3) திருமுறை ஓதுதல்
4) கொடியிறக்கம்

போன்ற நிலைகளைக் கொண்டனவாகப் பிரிக்கமுடியும்.

### 5-8-2-1 திருமுறை வீதியுலா

இன்றைய நிலைவரை உருவநிலையில் உள்ள நடராசப் பெருமானின் திருமேனியே அலங்கரிக்கப்பட்டுப் பொதுவாக வீதிஉலா வருதல் உண்டு. ஆனால், இதற்கு மாறாக, 'திருமுறை முற்றோதல்' விழாவில் இறைவனாரின் இலிங்க உருவமே அலங்கரிக்கப்படுகிறது. கல்லுருவத் திருமேனியோ அல்லது செப்புத் திருமேனியோ அலங்கரிக்கப்படுவதில்லை. இதற்குரிய காரணங்கள் :

1) வீதியுலாவில் இறைவனாரின் திருவுருவம் தெளிவாகத் தெரியக்கூடிய அளவிற்கு இலிங்கத் திருமேனி இல்லை என்பது முதற்காரணம்.

2) இலிங்க வடிவில் மிகப்பெரிய கல்லுருவத் திருமேனிகள் இருப்பினும் அக்கல்லுருவத் திருமே னிகள் வீதிஉலா வருதல் வழக்கமில்லை.

3) கோவிலிருந்து புறப்பட்டு வீதியுலா வருகின்ற இறைவனாரின் உருவம், இல்லம் ஒன்றில் வைக் கப்பட்டு வழிபாடு நடத்தப் பெறுவதால் கோயிலில் பூசைக்குரிய ஒன்றை இல்லத்தில் வைத்து வழிபாடு செய்வது முறையன்று என்ற காரணத்தினால் புதிதாக வடிவமைக்கப்பட்ட இலிங்கத்தையே திருமுறை முற்றோதுவார் வீதிஉலாவில் உலா வரச்செய்கிறார்.

புதுச்சேரி முத்தைய முதலியார் வீதியிலுள்ள சுப்பிர மணிய கோவிலில் இறைவனார் அமரும் பீடத்தில் இலிங்க வடிவினை வைத்து அலங்கரித்தனர். திருநீற்றாலும், மலர் களாலும், அணிகலன்களாலும் அலங்கரிக்கப்படும் இறை வனின் பாதத்தைச் சுற்றி அதாவது இலிங்கத்தின் உடுக்கை வடிவான அடிப்புறத்தைச் சுற்றிப் பன்னிரு திருமுறைக ளையும் வைத்துக் கட்டிவிடுகின்றனர். காலை ஆறுமணி யளவில் அடியார்களின் திருக்கூட்டம் புடைசூழக் கற்பூர வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. பின் கோயிலை ஒருமுறை சுற்றிவந்து அவர்கள் வாயிலை அடைகின்றனர். உலா விற்கு இறைவனார் தயார்நிலையில் இருக்கும்போது மீண்டும் கற்பூர வழிபாடு நடத்தப்படுகின்றது. ஓதுவார்கள் 'நால்வர் துதி'யை முதலில் பாடி, பின் 'பிடியதன்' எனத்தொடங்கும் தேவாரப் பதிகப் பாடலைப் பாடிய வண்ணம் முத்தியால்பேட்டை, முத்தையமுதலியார் வீதி, அருள்மிகு சுந்தர விநாயகர், சிவசுப்பிரமணிய சுவாமி சித்தி விநாயகர் தேவஸ்தானம் போன்ற இடஙகளில் திரு முறை ஓதியவண்ணம் இறைவன் வீதியுலா வந்தனர்., இப்படி ஓதியபடி ஏற்றுப் போற்றுவோர் இல்லத்தில் திரு முறைகள் இறைவனோடு சென்று சேர்கின்றன.

## 5-8-2-2 கொடியேற்றம்

இறைவன் திருமுறையோடு வீதிஉலா வந்து இல்லம் அடைந்தபிறகு நடக்கும் நிகழ்ச்சி கொடியேற்றுதலாகும். கொடியை ஏற்றுவதற்கு முன்பாகச் சில வழிபாடுகளைச் செய்கின்றனர். கொடியின் பீடத்தில் மஞ்சள் பொட்டு ஐந்தும், அதற்குமேல் குங்குமமும் இட்டுப் 'பஞ்சாட்சரம்' ஓதுகின்றனர். ஓதியபின் மலர் வழிபாடு செய்கின்றனர். கொடிக்கம்பத்திற்கு முன்பாகக் கிழக்கு நோக்கி வாழை யிலையில் தேங்காய், வெற்றிலை பாக்கு, பழங்களை வைத்துக் கற்பூரம் ஏற்றி வழிபாடு செய்கின்றனர்.

### 5-8-2-2-1 விநாயகர் வணக்கம்

திருமுறை முற்றோதுதலை நடத்துபவர் கொடியை ஏற்றத் தயார்நிலையில் இருக்கும்போது முதலில் ஓதுவார் களால் 'விநாயகர் வணக்கம்' செய்யப்படுகின்றது.

> ''பிடியதனு ருவுமை கொளமிகு கரியது
> வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
> கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
> வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே''[6]

என்ற பாடல் பாடப்படுகின்றது.

### 5-8-2-2-2. கொடிக்கவி

கொடிக்கவி என்பது மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்றாகும். இது உமாபதி சிவாச்சாரியார் என்பவரால் பாடப்பெற்றதாகும். இக்கொடிக்கவி நான்கு 'பா'க்களை உள்ளடக்கியது. கட்டளைக் கலித்துறை பா வகையில் ஒன்றும் வெண்பா வகையில் மூன்றும், ஆக நான்கு திருப்பாடல்கள் உள்ளன. தில்லைத் திருக்கோயி லில் திருவிழா எடுக்கும் பொழுது ஏற்றாமல் இருந்த கொடியை இந்தச் சாத்திரத்தைப் பாடி உமாபதி சிவாச் சாரியார் ஏற்றிவைத்தார் என்பது வரலாறு. கொடிக்கவி கள் பின்வரு நிலைகளில் அமைகின்றன :

1) உயிரின் குறிக்கோள்
2) உயிருக்கு அருளும் முறைமை
3) திருவருளை வேண்டுதல்
4) திருவைந்தெழுத்து விளக்கம்

### 1) உயிரின் குறிக்கோள்

''ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம்; ஒன்றுமேவிடில், ஒன்று ஒளிக்கும்; எனினும் இருள் அடராது; உள் உயிர்க்குஉயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்து உளதேனும் திரிமலத்தே குளிக்கும் உயிர், அருள் கூடும்படி கொடி கட்டினனே''

### 2) உயிருக்கு அருளும் முறைமை

''பொருளாம் பொருள் எது? போது எது? கண்ஏது?
இருளாம் வெளிஏது? இரவுஏது? - அருளாளா
நீ புரவா வையம் எலாம் நீ அறியக்கட்டினேன்
கோபுரவாசல் கொடி''

### 3) திருவருளை வேண்டுதல்

''வாக்கலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்கா உணர்வு அறிய தன்மையனை-நோக்கிப்
பிறித்து அறிவு தம்மில் பிரியாமை தானே
குறிக்கும் அருள் நல்கக்கொடி''

### 4) திருவைந்தெழுத்து விளக்கம்

''அஞ்சு எழுத்தும், எட்டு எழுத்தும், ஆறு எழுத்தும், நாலு எழுத்தும்,
பிஞ்சு எழுத்தும், மேலைப் பெருஎழுத்தும் - நெஞ்சு அழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமல் காட்டக்கொடி''

இப்பாடல்கள் ஒவ்வொன்றையும் பாடி முடிக்கும் போது கொடியை ஒவ்வோர் அடியாக உயர்த்துகின்றனர்.

இறுதியில் நான்கு பாடல்கள் முடிந்தபின் விரைவாகக் கொடியை ஏற்றுகின்றனர். கொடியை ஏற்றியபின் கயிற்றைக் கம்பத்திற்கு வலமாகச் சுற்றி முடிபோடுகின்றனர். மும்முடிச்சியின் மீது மஞ்சள், குங்குமம் இட்டு, பூ வைத்து கற்பூர வழிபாடு செய்கின்றனர்.

## 5-8-2-2-3 திருஞானசம்பந்தர் பாடல்

கொடிக்கவி பாடியபிறகு திருஞானசம்பந்தரைச் சிறப்புச்செய்யும் நோக்கோடு இரண்டாம் திருமுறையில் இடம்பெறும் 'கண்காட்டுநுதலானுங் கனல் காட்டுங் கையானும்' என்று தொடங்கும் தேவாரப்பாடல் பாடப்படுகின்றது. இதனைத் தொடர்ந்து 'போற்றியென் வாழ்முதலாகிய பொருள்' என்ற திருவாசகப் பாடலைப் பாடியபடியும்,

'காலை எழுந்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி'

என்று கூறியபடியும் கொடி ஏற்றும் நிகழ்ச்சி நிறைவு பெறுகிறது.

## 5-8-2-3 திருமுறை ஓதுதல்

கொடியேற்ற நிகழ்ச்சியினைத் தொடர்ந்து திருமுறை ஓதும் நிகழ்ச்சி நடைபெறுகின்றது. இந்நிகழ்ச்சியின்போது திருஞானசம்பந்தர் அருளிய மூன்றாம் திருமுறையில் 43 முதல் 63 வரை உள்ள திருப்பதிகங்கள் மட்டுமே ஓதப்பட்டன. இவ்விழாவின்போது சீகாழியைச் சேர்ந்த கலைமாமணி சிவத்திரு சா. திருஞானசம்பந்த ஓதுவார் அவர்கள் திருமுறை ஓத, அப்பாடல்களுக்கு மயிலம் ஸ்ரீமத் சிவஞான பாலயசுவாமிகள் தமிழ்க் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர் சு. திருநாவுக்கரசு விளக்கம் அளிக்கின்றார்.

முதலில் இறைவனுக்குக் கற்பூர வழிபாடு நடத்திய பின் இத்திருமுறை ஓதும் பணியைத் தொடங்கின்றனர்.

இதில் முதலில் பண்ணுடன் கூடிய நிலையில் தேவாரப் பாக்கள் ஓதுகின்றனர். ஒவ்வொரு பதிகத்திலும் உள்ள முதல் பாடலையும், ஈற்றுப் பாடலையும் மட்டும் பாடலாக வும், இடையிலுள்ள தேவாரப் பாக்களை விருத்தமாகவும் பாடுகின்றனர். இதனைத் தொடர்ந்து விளக்கமளிப்பவர் ஓதிய பதிகத்திற்குரிய தலத்தின் வரலாற்றைக் கூறியபின் பாடலுக்குரிய பொருளைக் குறிப்பிடுகின்றார். இடையில் வைணவ அடியார்களின் பெருமைகளையும் குறிப்பிடு வதுண்டு. 'இந்த சைவ சமய வழிபாட்டில், பிற சமயங் களிலுள்ள சிறந்த தத்துவங்களையும், அவர்தம் உயர் பண்புகளையும் எடுத்துரைப்பதில் யாதொரு தவறுமில்லை என்று ஒருவித சமய ஒருமைப்பாட்டுடன் சொற்பொழிவு நிகழ்த்தியது குறிப்பிடத்தகுந்ததாகும்.

## 5-8-2-3-1 குருலிங்க சங்கம வழிபாடு

இவ்விழாவில் நடந்த வழிபாட்டு நிகழ்ச்சி குருலிங்க சங்கம வழிபாட்டுடன் ஒப்பு நோக்கத்தக்கதாகும். இனி குரு, லிங்க, சங்கம வழிபாடு என்றால் என்ன? இதன்வழி ஞானசம்பந்தர் வழிபாட்டு நிலையை எங்ஙனம் அடையப் பெறுகின்றார் என்பது குறித்து காணுதல் வேண்டும்.

### 1) குரு வழிபாடு

'ஆன்மீகத்துறையில் ஐயங்களைப் போக்கி நல்வழிப் படுத்துபவரே குரு ஆவார். இவர் வணங்குதற்குரிய சிவ சொரூபமாக இருந்து, கல்வியைப் போதிப்பவராவார். குருவின் உபதேசப்படி ஒழுகுதல் அவர்களுக்குச் செய்யும் வழிபாடுகளில் முதன்மையானது. அவரவருடைய குருவை உள்ளன்போடு வழிபடுவதுடன் சமயக் குரவர்களுக்குக் குருபூசை செய்துவருவது அவசியமாகும். மங்கையர்க்- கரசியார், குலச்சிறையார், அப்பூதி அடிகள் ஆகியோர் குரு வழிபாட்டால் வீடுபேறு அடைந்தோராவார்'[8] என்று சைவ சமயக் கையேடு குறிப்பிடுகின்றது.

சைவ சமண போராட்டக் காலத்தில் ஞானசம் பந்தர் சமணர்களுக்கு எதிராக நின்று போராடி வென்ற வராவார். பாண்டியன் சமண சமயத்தைச் சார்ந்த அக் காலத்தில் இவனது மனைவியான மங்கையர்க்கரசியும், அமைச்சரான குலச்சிறையாரும் நாளும் சிவநெறியை ஓம்பி ஞானசம்பந்தரையே குருவாக நினைத்து வழி பட்டனர். எனவேதான், சமணர்களால் போக்க இயலாத வெப்புநோயை ஞானசம்பந்தரைக் கொண்டு போக்கினர். பின்னரே ஞானசம்பந்தர் பாண்டியன் வழிபாட்டுக்கு உரிய வரானார். இதன் அடிப்படையில் இவ்வில்ல விழாவிலும் ஞானசம்பந்தருக்கே வழிபாடு நடத்தப்பெறுகிறது.

## 2) இலிங்க வழிபாடு

சிவபெருமானின் அருவுருவத் திருமேனி சிவலிங்கம். இந்த இலிங்கத்தின் பீடம் சக்தியையும், இலிங்கம் சிவத் தையும் குறிக்கும். சிவலிங்கம் பரார்த்தலிங்கம் அல்லது தாவரலிங்கம் எனவும், ஆன்மார்த்தலிங்கம் அல்லது இட்ட லிங்கம் எனவும் இருவகைப்படும். திருக்கோயிலில் முதலா வது வகை நிலையாக வைக்கப்படுவதாகும். இவ்விழாவில் எடுக்கப்பட்ட இலிங்கம் ஆன்மார்த்த இலிங்கமாகும்.

## 3) சங்கம வழிபாடு

'சிவபெருமானிடத்து மெய்யன்பு பூண்டொழுகும் சிவ னடியார் திருக்கூட்டம் சங்கமம் எனப்படும் சிவபெருமனுக்கு திருத்தொண்டு புரிந்தும் அவரது புகழ்பாடியும் திருவைந் தெழுத்தை ஓதியும் அவர்கள் இன்புறுவர். சிவச் சின்னங் களை அணிவர். இதன் அடிப்படையில் முற்றோதும் குடும்பத்தைச் சார்ந்த 'சாவித்திரி அம்மாள்' என்பவர் திருவைந்தெழுத்தை ஓதி, சிவனடியார்களைப் போற்றி இறைவனடியை அடைந்துள்ளார். இவருடைய திருவுருவப் படமும், திருமுறைகளுக்குக்கீழ் வைக்கப்பட்டு வழிபடப் படுகிறது. எனவே, குருநிலையில் ஞானசம்பந்தருடைய திருவுருவப்படமும், இலிங்க நிலையில் ஆன்மார்த்த லிங்க

மும் சங்கமநிலையில் சாவித்திரி அம்பாளின் உருவப்பட்டமும் வைக்கப்பட்டு வழிபடப்படுகின்றது.

### 8-2-4. கொடியிறக்கம்

கொடியிறக்கம் என்பது முற்றோதியபின் நடைபெறுவதாகும். இச் சமயத்தில் கொடிக்குமுன் கற்பூர வழிபாடு நடத்திக் கொடியை மெதுவாகக் கீழ்நோக்கி இறக்குகின்னர். இதற்குப்பின், 'வான்முகில்' என்று தொடங்கும். கந்தபுராணப் பாடலும்,

> 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
> வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
> ஆழ்க தீயதெல் லாமர னாமமே
> சூழ்க வையக முந்துயர் தீர்க்கவே'' [9]

என்ற திருஞானசம்பந்தர் பாடலும் ஓதுவார்களால் ஓதப்படுகின்றன. இவ்வழிபாட்டினைத் தொடர்ந்து பன்னிரு திருமுறைகளிலிருந்தும் முதல் பாடல் ஓதப்பட்டு இறுதியில் திருப்புகழைப் பாடித் திருமுறை முற்றோதும் விழாவை நிறைவுசெய்தனர்.

### 5-8-3 அடியார்க்குச் செய்யும் தொண்டு

திருமுறை முற்றோதல் நிகழ்ச்சியில் கலந்துகொண்ட அனைவருக்கும் ஆ. இராசரத்தின முதலியார் அவர்களால் தொகுக்கப்பட்ட 'சைவ சமயக் கையேடு' எனும் நூல் அன்பளிப்பாக வழங்கம்பட்டது. இதுதவிர அடியார்களுக்கு அன்னமிட்டுப் பசியாற்றப்படுகிறது. விழாவின் முடிவில் முற்றோதியவர், பெரியோர் முதல் சிறியவர்கள் வரையிலான அனைவருக்கும் ஆசி வழங்குகின்றனர்.

## 5-9 சைவ ஆகமங்களில் ஞானசம்பந்தர் விழா

### 5-9-1 காரணாகமம்

சைவ ஆகமங்ரள் இருபத்தெட்டனுள் ஒன்றாகிய

காரணகாமத்தில் 141-ஆம் படலமாகிய மகோற்சவ விதிப் படலத்தில் 81 முதல் 83 முடிய உள்ள சுலோகங்களில் ஞானசம்பந்தருடைய வரலாற்றினை உற்சவமாகச் செய்யும் முறை காணப்படுகிறது என்று 'தேவார ஆய்வுத்துணை' என்ற நூல் குறிப்பிடுகிறது

''பிரமபுரத்தில் அந்தணர் மரபில் அவதரித்த புதல்வனுக்கு அன்போடு உமாதேவி பால்கொடுத்த திருவிழாவை நிகழ்த்துவது உமாதேவிக்கு உவகைதருவதாகும். சமணர்களைச் சமணாந்தகர் ஆகிய ஞானசம்பந்தர் வாதிட்டு வென்ற உற்சவத்தையும் நிகழ்த்தவேண்டும். இஃது ஆறாம் நாள் உற்சவமாதல் வேண்டும்''[10] என்ற கருத்தும் இங்குக் கருதத்தக்கது.

## 5-9-2 அம்சுமதாகமம்

காரணகாமத்தை ஒப்ப மற்றொரு ஆகமம் அம்சுமதாகமம் ஆகும். இவ்வாகமம் ''க்ஷபணத்வேஷி (சம்பந்தர்) மூர்த்தியைச் சிவிகையில் எழுந்தருளச் செய்து அம்மன் கோயிலை அடைந்து அங்குச் சம்பந்தருக்குப் பாற்சோறு நிவேதனம் செய்யவேண்டும். ஸ்தோத்ர பாடகராகிய ஓதுவாரை அழைத்து ஞானசம்பந்தருடைய தமிழ்ப்பாடல்களைப் பாடச் செய்யவேண்டும். நிவேதனம் செய்யப்பட்ட பாற்சோற்றை ஓதுவாருள்ளிட்ட பக்தர்களுக்கு வழங்க வேண்டும். ஞானசம்பந்தர் படிவத்தை நன்கு அலங்கரித்துத் திருவீதிகளில் வலமாக எழுந்தருளுவித்து இறைவனுக்கு எதிரே நிறுத்தவேண்டும். ஞான வைராக்கிய பக்தியில் சிறந்த அன்பர்கள் சூழ்ந்திருக்கும் அவ்விடத்தில் ஓதுவாரைக் கொண்டு ஞானசம்பந்தர் வரலாற்றைச் செவிமடுக்கும் வாய்ப்பினை உண்டாக்கவேண்டும். ஞானசம்பந்தர் சரித்தைப் பாடிய ஓதுவாரை ஆடை முதலிய அளித்துக் கௌரவிக்கவேண்டும். விழா முடிவில் சமணர்களைக் கழுவேற்றிய நிகழ்ச்சியை உற்சவ வடிவில் கொண்டாட வேண்டும்'' என்று குறிப்பிட்டுள்ளது.[11]

### 5-9-3 சௌந்தர்யலகரி

ஞானசம்பந்தரைப் பற்றி 9-ஆம் நூற்றாண்டினராகிய ஆதிசங்கரரும் குறிப்பிட்டுள்ளார். தாம் அருளிச்செய்த சௌந்தர்யலகரின் 75-ஆம் சுலோகத்தில் "மலைமகளே உன் திருமுலைப்பாலை இதயத்திலிருந்து வெளிப்படுத்தும் அமுத வெள்ளம் போலவும், நாமகளே பால்வடிவில் வந்தது போலவும் நான் நினைக்கிறேன். ஏனெனில் நீ கருணையால் ஈந்த அப்பாலைப் பருகித் தமிழ்ச் சிறுவன் கவிகளுக்கும் மேதக்கவனாகிவிட்டான்"[12] என்று ஞான சம்பந்தருடைய அருட்கவிகளை வியந்து பேசுகிறார்.

## பிரிவு-ஆ

## திருஞானசம்பந்தரின் திருவுருவங்கள்

### 5-10 முன்னுரை

சைவ பக்தி இயக்கத்திற்கு வழிவகுத்த திருஞானசம்பந்தரின் திருமேனி பல்வேறு அமைப்புகளில் வடிவமைக்கப் பட்டுள்ளது. ஓவியங்களைவிடச் செப்புத் திருமேனிகளும் கல்லுருவத் திருமேனிகளுமே மிகுதியாகக் காணப்படுகின்றன. ஞானசம்பந்தர் கையில் பால்கிண்ணம் ஏந்திய நிலையிலும், தாளம் ஏந்திய நிலையிலும், நடனம் ஆடும் நிலையிலும் காணப்படுகிறார். சிற்சில இடங்களில் மட்டும் அபயகர நிலையில் ஞானசம்பந்தரின் திருமேனி வடிவமைக் பகப்பட்டுள்ளது. பிரஞ்சு இந்தியப் பண்பாட்டுக்கழகமும் பிற ஆய்வுநூல்களும் அளித்த தகவல்களின் அடிப்படையில் திருஞானசம்பந்தரின் திருமேனிகள் விளக்கப் படுகின்றன.

### 5-11 கல்லுருவத் திருமேனிகள்

திருஞானசம்பந்தரின் கல்லுருவத் திருமேனிகள் சிற்பங்களாகவும், சிலைகளாகவும் அமைந்துள்ளன. நடன மாடும் நிலையில் கோதாவலூர், சேந்தமங்கலம், திருத்

தாங்கூர், குடுமியான்மலை, வேதாரண்யம் போன்ற இடங்களில் காணப்படுகின்றன.

கையில் தாளம் ஏந்திய நிலையில் மேலப்பெரும்பள்ளம் திருச்செங்காட்டாங்குடி, ஆவனி, அரகண்டநல்லூர், தெரிசனங்கோப்பு, சிதம்பரம், வெள்ளூர், திருவாலங்காடு ஐம்பை, சித்தர்காடு, பல்லவனேஸ்வரம், நெடுங்காடு, கரந்தை போன்ற இடங்களில் காணப்படுகின்றன.

## 5-1-11 நடனநிலையில் திருமேனிகள்

### கோவாவலூர்

கோவாவலூர் சுவரில் சிற்பமாக அமைந்துள்ள இத் திருவுருவம் நாட்டிய நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது. தலையில் கிரீடம் அணிந்தும், கைகள் நாட்டிய முத்திரை யைப் பதித்தும், இடதுகாலை உயர்த்தியும், வலதுகாலைத் தரையில் பதியவைத்தும் காணப்படுகிறது. கழுத்தில் பல் வேறு அணிகலன்களையும், கைகளின் வளையல், காலில் தண்டை முதலியவற்றை அணிந்தவராகவும் இச்சிற்பம் தோற்றம் பெற்றுள்ளது. இடையில் ஆடை காணப்பட வில்லை. ஆனால் அணிகலன் அணிந்த நிலையில் அமைக்கப் பட்டுள்ளது.

### ஆவனி

நடனமாடுவதுபோல் ஸ்ரீ ராமலிங்கேஸ்வரர் & லக்ஷ்ம னேஸ்வரர் கோயில் சுவரில் ஞானசம்பந்தரின் திருமேனி செதுக்கப்பட்டுள்ளது. தலையில் கிரீடம், கைகளில் வளையும், கழுத்து இடைப்பகுதிகளில் அணிகளன்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. காலில் தண்டை அணிந்து தோற் றமளிக்கும், இவரின் இடையில் ஆடையேதும் இல்லை இடதுகாலைப் பீடத்தில் பதியவைத்தவண்ணமும், வலது காலைச் சற்றுத் தூக்கியநிலையிலும் நடனமுத்திரை பதித் தபடி காட்சியளிக்கிறது இந்தத் திருமேனி.

**சேந்தமங்கலம்**

தலையில் கிரீடமும், காதில் குழையும், கழுத்து இடைப்பகுதிகளில் அணிகலன்களையும் அணிந்தவராக ஞானசம்பந்தர் தோற்றம் கொண்டுள்ளார். கைகளில் வளையும், கால்களில் சதங்கையும் அணிந்துள்ளார். தனித்ததொரு பீடம் இவருக்காகவே அமைக்கப்பட்டு அதில் நடன நிலையில் தோற்றம் பெற்றுள்ளார்.

## 5-11-2 தாளம் ஏந்திய நிலையில் திருமேனிகள்

**திருவாலங்காடு**

இவ்வூரில் அமைந்துள்ள இத்திருவுருவம் தலையில் கிரீடம் அணிந்த நிலையில் விரிந்த சடைமுடியுடன் தோற்றமளிக்கின்றது. கழுத்து, இடை, கைகளில் அணிகலன்களை அணிந்தும், தோளில் தோள்வளை, காலில் தண்டை ஆகிய வற்றை அணிந்தும் உள்ளது. நின்றநிலையில் கைகளில் தாளத்தினை ஏந்தியபடியும் காட்சிதருகின்றது.

**ஆவணி :**

சுவரில் இருகைகளிலும் தாளத்தை ஏந்தியபடி, நின்ற கோலத்துடன் காட்சி தருகிறார். விரிந்த சடைமுடியுடனும் கழுத்து, இடை, தோள், கைகளில் அணிகலன்களை அணிந்தவராகவும், காலில் தண்டையுடனும் அமைக்கப் பட்டுள்ளார். வடிகாதுகளுடன் தோற்றமளிக்கும் ஞான சம்பந்தரின் இடைப் பகுதியில் ஆடை ஏதும் காணப் பெறவில்லை.

## 5. 12 செப்புத்திருமேனிகள்

ஞானசம்பந்தரின் செப்புத் திருவுருவம் நடனமாடும் நிலை, பால்கிண்ணம் ஏந்தியபடி இறைவனைச் சுட்டும் நிலை, தாளம் ஏந்திய நிலை என்ற மூன்று நிலைகளில் காணப்படுகின்றது.

நடனமாடும் நிலையில் அவிநாசி, பல்லவனேசுவரம், காடையூர், விராச்சிலை, மதுராந்தக நல்லூர், தொட்

டியம், பேரையூர், புதுக்கோட்டை, திருபாளம், தருமபுரம், புதுக்கோட்டை முதலிய இடங்களில் ஞானசம்பந்தரின் திரு வுருவங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

பால்கிண்ணம் ஏந்திய நிலையில் நாகப்பட்டினம், மதுரை, புறவச்சேரி, வடபாதிமங்கலம், மன்னார்குடி, திருக்கோலக்கா, சிவபுரம், புதுக்கோட்டை, தருமபுரம் போன்ற இடங்களில் திருவுருவங்கள் காணப்படுகின்றன.

மேலும், திருப்பாலைவனம், திருவண்ணாமலை, காட்டுமன்னார்குடி, காந்தீசுவரம் போன்ற இடங்களில் கையில் தாளம் ஏந்திய நிலையில் ஞானசம்பந்தரின் திரு மேனிகள் காணப்படுகின்றன.

## 5.12.1 நடனநிலையில் செப்புத்திருமேனிகள் :

### களப்பாள் :

தஞ்சையில் உள்ள களப்பாள் என்ற இடத்தில் ஞான சம்பந்தரின் செப்புத் திருமேனி ஒன்று நடனநிலையில் காணப்படுகிறது. வலது காலைத் தூக்கியும், இடது காலைப் பீடத்தில் பதித்தவண்ணமும் தோற்றமளிக்கிறது. இறை வனைச் சுட்டும் நிலையில் வலது கைவிரலை மேல் நோக்கியும், இடது கையை நடன முத்திரையோடு நீட்டிய நிலையிலும் உள்ளது. தலையில் கிரீடம் அணிந்தும் கழுத்து இடைப் பகுதியில் அணிகலன்களை அணிந்தும், கைகளில் வளையல்கள், வங்கி காலில் சலங்கை அணிந்தும் வடிகாதுகளுடன் காணப்படுகிறது.

### மதுராந்தகநல்லூர்

சிதம்பரம் தாலுகாவில் உள்ள மதுராந்தக நல்லூரில் அருணாச்சலேசுவரர் கோயிலில் ஞானசம்பந்தர் நடன மாடும் தோற்றத்தில் காணப்படுகிறார். தலையில் கிரீட மும், கைகளில் வளையல், தோள்வளை, விரல்களில் கணையாழி. ஆடையற்ற இடைப்பகுதியிலும், கழுத்திலும் அணிகலன்களையும் அணிந்துள்ளார். காலில் தண்டை,

சலங்கை இரண்டும் அணிந்து வடிகாதுகளுடன் தோற்ற மளிக்கிறார், இடதுகாலை உயர்த்தியும் வலதுகாலைக் கீழே பதித்தபடியும் வலது கைவிரல் மேல்நோக்கிச் சுட்டிய நிலையிலும் இத்திருமேனி காணப்படுகிறது.

**தம்பிக்கோட்டை**

பட்டுக்கோட்டையில் உள்ள தம்பிக்கோட்டையில் சுந்தரேசுவரர் கோயில் காணப்படுகின்றது. இக்கோயிலில் உள்ள சம்பந்தரின் செப்புத் திருமேனி நடனமுத்திரை பிடித்தபடி உள்ளது. தலையில் கிரீடம் அணிந்துள்ளார். ஆடையற்ற இடைப் பகுதியிலும், கழுத்திலும் கைகளிலும் அணிகலன்களை அணிந்துள்ளார். தோளில் தோள் வளையும், காலில் தண்டை, சலங்கை ஆகியவற்றை அணிந்து வடிகாதுகளுடன் காட்சி தருகின்றார். வலது கரம் அபயகரமாக உள்ளது. வலது காலை உயர்த்தியும் இடது காலைப் பதித்த நிலையிலும் தோன்றுகின்றார்.

## 5.12.2 தாளம் ஏந்திய நிலையில் செப்புத்திருமேனிகள்

**சிம்மக்காவனம் :**

செங்கற்பட்டில் அமைந்துள்ள அங்கோடீஸ்வரர் கோயிலில் ஞானசம்பந்தர் மிகப் பெரிய தாளம் ஏந்திய நிலையில் தோற்றமளிக்கின்றார். கொண்டை அணிந்து பயிலிறகு சூட்டப்பட்ட நிலையில் தலையலங்காரம் உள்ளது. கைகளிலும் கழுத்திலும் சில அணிகலன்களையே அணிந்துள்ளார். இடையில் ஆடையும், மார்பில் முப்புரி நூலும் அணிந்தவராக உள்ளார். கழுத்தில் உருத்திரமாலை அணிந்துள்ளார்.

**திருஈங்கோய்மலை :**

திருச்சிராப்பள்ளி முசிறிக்கு அருகிலுள்ள இவ் விடத்தில் ஞானசம்பந்தர் ஒல்லியான நெடிய தோற்றத்தில் காணப்படுகின்றார். கழுத்தில் அணிகலன்களுடனும், கை களில் வளையல், வங்கி முதலியவற்றுடனும், இடையில் ஆடையுடனும் தோற்றமளிக்கின்றார். கைகளில் தாளம்

வாசிப்பது போன்ற நிலையில் உள்ளார். இறுகக் கட்டிய குடுமியுடனும், வடிகாதுகளுடனும் வடிவமைக்கப் பட்டுள்ளார்.

### குத்தாலம் :

குத்தாலத்தில் உள்ள ஸ்ரீ உக்தவடீஸ்வரசுவாமி கோயிலில் தலையில் கிரீடம் அணிந்த நிலையில் தோற்ற மளிக்கிறார். கழுத்து, கை, தோள், இடை பகுதிகளில் பல் வேறு அணிகலன்களை அணிந்து அரச தோற்றத்தில் காட்சி தருகிறார். காலில் சலங்கையும் இடையில் ஆடையும் அணிந்து கைகளில் தாளம் வாசிக்கின்றார். இது பார்ப்ப தற்கு வணங்கும் நிலையில் உள்ளதுபோல் தோன்றுகிறது.

## 5.12.3 பால்கிண்ணம் ஏந்திய திருவுருவங்கள்

### சீகாழி :

சீகாழியிலுள்ள திருமேனி பால்கிண்ணம் ஏந்திய நிலை யில் உள்ளது. கழுத்து இடைப்பகுதியில் மட்டுமே அணி கலன்களை அணிந்துள்ளார். ஆடையற்ற நிலையிலுள்ள இவரது வலது கரம் ஒருவிரல் சுட்டிய நிலையிலும், இடது கரம் பால் கிண்ணம் ஏந்திய நிலையிலும் உள்ளன.

### திருநாவலூர் :

நாவலூர் ஸ்ரீ பக்தஜனேஸ்வரர் கோயிலில் புதிய தோற்றத்துடன் திருஞானசம்பந்தரின் திருமேனி அமைந் துள்ளது. தலை, கழுத்தில் உத்திராக்கமாலை அணிந்த வராக உள்ளார். இடைப்பகுதியில் அணிகலன் அணிந்தவ ராகவும், காலில் தண்டை சலங்கை இரண்டும் அணிந்த வராகவும், முப்புரிநூல் அணிந்தவராகவும் இடையில் ஆடையற்ற நிலையில் தோற்றம் பெற்றுள்ளார். வலது கரம் மேல்நோக்கி ஒரு விரலால் சுட்டிய நிலையிலும், இடது கரம் பால்கிண்ணம் ஏந்திய நிலையிலும் உள்ளது. வடிகாதுடன் தோன்றும் இவர் புன்னகை தவழும் முக முடையவராகத் திகழ்கிறார்.

ஞானசம்பந்தரின் திருவுருவங்கள் அனைத்தையும் பார்க்கும்போது, இருநிலைகளில் காணப்படுகின்றது. அதாவது நடன நிலையிலும், பால் கிண்ணம் ஏந்திய நிலையிலும் வடிக்கப்பட்டுள்ள திருமேனிகள் ஆடையற்ற நிலையிலேயே காணப்படுகின்றன. தாளம் பெற்ற நிலையிலுள்ள திருமேனிகளில் பெரும்பாலும் ஆடையுடன் தோற்றமளிக்கின்றன. காலப்போக்கில் ஞானசமபந்தரின் திருவுருவ வளர்ச்சி இவ்வாறு பெறப்படுகின்றது.

## 5.13 முடிவுரை :

ஞானசம்பந்தர் பற்றிய விழாக்களையும் உருவங்களையும் ஆய்வுநோக்கில் காணும்போது சில கருத்துக்கள் புலப்படுகின்றன.

ஞானசம்பந்தருக்குப் பல்வேறு இடங்களில் விழாக்கள் நடத்தப்படுகின்றன. இவ்விழாக்களின்மூலம் சமய எழுச்சிக் காலத்தில் சைவம் தழைக்க இவராற்றிய தொண்டிற்காகவே இறைநிலை அடைந்து வழிபாட்டிற்குரியவராகின்றார் என்பது தெரியவருகிறது. பேச இயலாத குழந்தை பேசியதற்காகத் திருக்கோலக்கா இறைவிக்குத் தானமாகப் பொற்றாளம் கொடுத்த செய்தியால் இன்றளவிலும் மக்கள் ஞானசம்பந்தர் பொற்றாளம் பெற்ற செய்தியினை நம்பி வருவது பெறப்படுகிறது.

திருமுறை முற்றோதலின் வாயிலாக அடியார்களின் இல்லத்திலும் ஞானசம்பந்தரைப் போற்றும் நிலை இன்றும் இருந்துவருவது புலனாகின்றது.

ஞானசம்பந்தரின் உருவங்களை எடுத்துக்கொள்வோமானால் ஓவியங்களைவிடத் திருமேனிகளே அதிகமாக உள்ளன. கல்லுருவ, செப்புத்திருமேனிகள் கோயில்களில் வழிபாட்டுக்குரியனவாகத் திகழ்கின்றன. இவற்றில் நடனமாடும் நிலையிலும், பால்கிண்ணம் ஏந்திய நிலையிலும் உள்ள திருமேனிகள் ஆடையின்றி பாலசம்பந்தராகத் தோற்

றமளிக்கின்றன. தாளம் பெற்றபின் இவர் சிறப்புப் பெற்ற வராதலால் ஆடையுடன் தோன்றுகிறார். திருமேனிகளின் அமைப்பைக் கொண்டும், கையில் ஏந்திய பொருளைக் கொண்டும் ஞானசம்பந்தரின் வயதினை ஓரளவு எடுத்துரைக்க இயலும்.

## குறிப்புகள்

1. தேவாரம் 1 : 1 : 1
2. பெரியபுராணம், ஞ.பு. பா. 68
3. திருக்கோலக்கா திருத்தல வரவாறு, ப. 8.
4. சு. இராஜசேகரன், திருக்கோயில் (இதழ்) மார்ச்சு, 1994, ப. 21
5. ந. சண்முகசுந்தர தேசிகர், திருவதிகைத் தலவரலாறு பக். 48-49.
6. தேவாரம் 1:123:5
7: உமாபதி சிவாச்சாரியார், கொடிக்கவி, பா. 1-4.
8. ஆ. இராசரத்தின முதலியார், சைவசமயக் கையேடு, ப. 150.
9. தேவாரம் 3:54:1
10. தேவாரம் ஆய்வுத்துணை-3, பக். 43.
11. மேலது., பக். 43.
12. மேலது., பக். 25-26.





# திருஞானசம்பந்தரின் இறைமையாக்கம்

இரா. வசந்தமாலை

- திருஞானசம்பந்தப் பெருமானின் வாழ்க்கையை வரலாற்றுத் திரிபுகளின்றி ஆராய்ந்து செம்மையாக விளக்கியுள்ளார்.

- அரிய புரட்சி வீரராக, சமூகத்தொண்டு புரிபவராகச் சம்பந்தர் விளங்குகிறார் என்ற ஆய்வாளரின் அறிவிப்பு மிகவும் பாராட்டுக்குரியது.

- நாளும் கோளும் கண்டு அஞ்சாப் பகுத்தறிவுநிலை போன்றவற்றால் சமுதாயத் தொண்டராகப் பெருமானைச் செல்வி இரா.வசந்தமாலை பார்க்கின்ற பார்வைப் பரிமாணம் குறிக்கத்தக்கது.

- புதிய பரிமாணத்தை மிக ஆழமாக, அருமையாக, தெளிவாக, சிறப்பாக விளக்கியுள்ள இவ்வாய்வு சமய இலக்கிய உலகிற்கு மற்றும் ஓர் அணிகலன் ஆகும்.

—— தவத்திரு பொன்னம்பல அடிகளார் -

மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகமெல்லாம்.